"கற்றோர்க டாமுகப்பர் கல்விதனி லாசையுள்ளோர்
பெற்றோ மெனவுகந்து பின்புகற்பர்—மற்றோர்கள்
மாச்சரியத் தாலிகழில் வந்ததென்னெஞ் சேயிகழ்கை
யாச்சரிய மோதா னவர்க்கு."

# விவேக சிந்தாமணி.

அறிவைப் பரவச்செய்வதற்கான மாதாந்தரத் தமிழ்ப் பத்திரிகை.

புத்தகம். 1. 1892ளூ ஆகஸ்டுமீ. இலக்கம். 4.

## சீவராசிகளினிலக்கணமும் பிரிவும்.

நம்மாலறியத்தகும் பதார்த்தங்க ளெல்லாம் கல் மண் முதலான உயிரில் பொருள்களும் புல் பூண்டு புள் விலங்கு முதலான உயிருள் பொருள்களும் என்ற இரு பெரும்பிரிவிற்குள் ளடங்குமென்பது யாவருமுணர்ந்த விஷயம். உயிரில் பொருள்களையும் உயிருள் பொருள்களையும் ஆதியோடந்தம் ஒத்துநோக்கி யவற்றிற்குள்ளவேற்றுமையைநிர்ணயித்து உயிர் அல்லது ஜீவனென்பதினிலக்கணம் இன்னதுதானென்று வரையறுத்து நிலைநிறுத்தல் நுண்ணிய சாஸ்திரப்பயிற்சி யுடையவர்க்கும் அரிதான காரியமாக இருக்கின்றது. ஆயினும் நமது நித்தியானுபவத்தில் நாம் கையாடுகின்ற பொருள்களுள் உயிருள்ளவை இவை, உயிரில்லாதவை இவை, எனப் பொதுவாக நாம் பகுத்தறிந்துகொள்ளுகிறோம். அறியாத சிறுபாலர்கள் ஒழிய, யாரேனும் கல் மண் முதலியவற்றாலாக்கப்படு முருவங்களைப் பூச்சியென்று உயிருள் பதார்த்தமாகக்கொண்டு மயங்குவதுண்டா? இவ்விதம் நாம் நமது தினசரியில் காணும் ஜீவராசிகளையும் ஜடராசிகளையும் பிரித்துணரும் குறிப்புகளைச் சற்றுற்றுணர்ந்து பார்த்து அவற்றின் வேறுபாடுகளை விளக்கும் இலக்கணங்களைச் சிறிது நிதானிப்போமாக.

2. இங்ஙனம் பார்க்கையில்ஜீவராசிகளுக்குரிய பல இலக்கணங்களுள் மூன்றிலக்கணம் யார்க்கு மெளிதில் புலப்படத் தக்கனவாயிருக்கின்றன. அவையாவன:—முதலாவது "அவயவீபாவமானசரீரம்" அல்லது "உறுப்போடமைந்த வுடம்பு".

இரண்டாவது விருத்தி க்ஷயம், அதாவது வளர்தல் கெடுதல்.

மூன்றாவது பிரத்தியுத்பாதாகம், அதாவது தன்னைப்போன்ற பிரதிநிதி சமைத்தல், அல்லது பிற்கிளையாக்கம்.

3. பிரஜையற்றவனுக்கு எப்படி ராஜாஎன்ற நாமம் வரமாட்டாதோ, பிள்ளையற்றவனுக்கு எப்படித் தந்தையென்ற பெயர் கிடையாதோ, அப்படியே உயிரில்லாவிடில் உடம் பென்ற வேற்றுமைத்தோற்றம் பிறவாது. உடம்பென்பது உறுப்புகளா லாக்கப்பட்ட யாக்கை. ஒரேபொருள் பலபாகங்களாகப் பிரிக்கப்படும்படி இருக்கவும், அப்படி பிரிக்கப்படும் பாகங்களுக்குத் தனித்தனி வெவ்வேறு தொழில்களும் அத்தொழில்களுக் கேற்ற கட்டுப்பாடு குண முதலியவையு மிருக்கவும் செய்தால், அப்பாகங்களி லொவ்வொன்றும் உறுப்புஅல்லது அவயவமெனப்பெயர்பெறும். அவ்வுறுப்புகளியற்றுந் தொழில்கள் பலவற்றையும் ஒருமைப்படுத்தி யனுபவிக்கும் சமூகத்திற்கே உடம்பு, யாக்கை, அல்லது சரீரம் என்ற பெயர் உரியதாகும். இதனைச் சோதித்தறிய விரும்புவோர் மரவர்க்கத்தி லேதேனுமொன்றை யெடுத்துப் பார்ப்பாராகில் அதற்கு வேர், தண்டு, கிளை, இலை, பூ,காய் முதலிய பலவுறுப்புகள் அமைந்து கிடப்பதையும், அவற்றி லொவ்வொன்றும்

வெவ்வேறான வடிவு, பண்பு, கட்டு, தொழில் முதலியவற்றைப் பெற்று நிற்பதையும், இவ்வவயங்களனைத்தையுந் தன்னுளடக்கி, யிவற்றின் செய்தொழில் பயனை யநுபவிக்கு மரமாகிய சமூகம், அவயவீபாவமடைந்து சரீரமெனும் பெயர்க்குரித்தாய் விளங்குவதையும் காண்பார்கள். இப்படியே ஆடு, மாடு, நாய், நரி முதலிய மிருகங்களைக்குறித்து யோசிக்கையிலும், அவற்றின் கண், செவி, கை, கால்முதலிய வெளியுறுப்புக்களும், அன்னாசயம் ரக்தாசயம் பித்தாசயமுதலிய உள்ளுறுப்புக்களும், அவற்றின் வெவ்வேறும் உருவம், குணம், விதானம் வியாபார முதலியனவும், அவ்வவயவங்களின் சமஷ்டியாகிய உடம்பின் நிலைமையும் காணலாகும். இரும்பு, கல் முதலியவற்றை யெடுத்துச் சோதித்துப்பார்க்கிலோ, அவை அவயவ பேதமற்றவைகளா யெங்கு மொருபடித்தாங் கட்டுப்பாடும் சமகுணமும் ஒரேதொழிலு முடைத்தாய் முற்கூறிய இலக்கணத்திற்கு மாறுபட்டு நின்றுதாமுயிரில் பொருளென விளக்கி நிற்பதும் புலப்படும். கடிகார முதலிய யந்திரங்களும் பல அங்கங்களா லாக்கப்பெற்றும் அவ்வங்கங்கள் வெவ்வேறும் வடிவம், குணம், கட்டு, தொழிலிவைகளை யுடையனவாயு மிருப்பதால், அவ்வங்கங்களை யுறுப்பென்னும், அவற்றின் சமஷ்டியாகிய யந்திரங்களை யுடம்பென்றுங் கொண்டு, அவைகளையு முயிருள்ள பதார்த்தங்களாக மதிக்கக்கூடாதோ எனின், அவ்வங்கங்களின் சேர்க்கை இயற்கையன்றிச் செயற்கையாதல் பற்றி யுறுப்பெனக் கூறுதல் வழக்கமன்று. அன்றியும் அவைகளையும் ஒருகாலுறுப்பெனவே மதிப்போமாயினும், உயிருள் பொருள்களுக்கு வகுத்த மூன்றிலக்கணங்களில் "உறுப்போடமைந்த உடம்பு" ஒன்று தவிர மற்றிரண்டு இலக்கணங்களும் பொருந்துமோவெனத் துணிந்த பின்னரே யந்திரங்களும் சீவராசிகளி லடங்குமெனக் கருதல் கூடும்.

நாம்கூறிய உயிர்களி னிரண்டாமிலக்கணம் விர்த்தி க்ஷயம் அல்லது வளர்தல் கெடுதலெனுங் குணமாம். இக்குணம் உயிரில்லாத பூதபௌதீகங்களுக்கும் அவற்றால் நாம் உண்டு பண்ணும் எவ்வகைக் கருவிகளுக்கும் யொருந்துவதன்று. அறியாதார்பாறைக் கற்கள் வளர்ந்துவருகின்றன வென்று மயங்குவர். அத்தோற்றத்திற்குக் காரணம், அக்கற்களைச் சுற்றியிருக்கு மண் முதலியன மழையாதியால் சிறிதுசிறிது நீங்கி யப்பாறைகள் காலக்கிரமத்தில் அதிகரித்து வெளிப்படுதலேயாம். இஃதன்றியும் அக்கினிபர்வதாதி ஏதுக்களாலும் அத்தோற்றம் உண்டாகுமென்பது பௌமியசாஸ்திரப் பிரசித்தம். உண்மையில் வளர்தல் கெடுதலென்பது ஆகாரஸ்வீகாரத்தின்பயனாகவே யிருக்கின்றது. நமது கொல்லையிற் பயிரிடும் கத்தரி, பாகல், கீரை முதலிய மரவர்க்கங்களெல்லாம் நீர் பாய்ச்சப்படாவிடில் வாடிச் சோர்வதையும் நீர் பாய்ந்தபொழுது தழைத்து வளர்வதையும் அறியார் யார்? இவைகள் யாவும் வேரினால் மண்ணிலுள்ள சில பௌதிகங்களையும், இலை முதலியவற்றால் காற்றிலுள்ள சில பௌதிகங்களையும், எல்லா அங்கங்களாலும் விசேஷமாய் வேரினாலும் நீரையுமுட்கொண்டு அவ்விதம் தங்களுக்குக்கிடைத்த பொருள்களைத் தத்தமக்குவேண்டிய பகுதிகளாக மாற்றித் தம் முறுப்பையும் உடம்பையும் வளர்த்துக்கொள்ளுகின்றன வென்பது கவனித்தால் யாவர்க்கும் புலப்படக்கூடியதே. இப்படி சீவராசிகள் வெவ்வேறு பூதபௌதிகங்களை யுட்கொண்டு அவற்றைத் தங்கள்சரீரத்தோடு அபின்னமாகக் கலப்பிக்குந் தொழிற்கே ஆகாரஸ்வீகாரம் அல்லது 'உண்ணல்' எனும்பெயர் அமையும். "உண்ணலென்பது தன்மயப்படுத்தல்" * ஒருபைக்குள் நாணயமிடுதல் போலும் ஒருபாண்டத்தில் யாதாயினு மொருபண்டம் பெய்தல்போலும் மன்று, இவ்வுண்ணுதல் எனுந்தொழில். நெய்யில் தோய்த்த பஞ்சு அந்நெய்யை உண்டதாகச் சொல்வது உபசாரமேயல்லாது உண்மையன்று. இவையுட்கொண்ட பொருள்கள் அவற்றின் குணங்களோடு மீண்டுவரக் கூடியவையாயும் அப்படி மீளாவிடினும் குணவேறுபாடு அடையாமல் இடப்பெயர்ச்சி மாத்திரமடைந்தவையாயும் நிற்பதினால் நாம் சிவிகையாதி வாகனத்தில் புகுந்திருக்குங்கால் நம்மை அவ்வாகனங்கள் உண்டவாறாகாதது போலவே அப் பை

* நாற்றேகைவிளக்கம் சூத்திரம் 24.

பாண்டம்பஞ்சுமுதலியனவும்யாதொன்றையும் உண்டதாக ஏற்படாது. நீரில் கரைக்கப்பட்டஉப்பும் அப்படியே நீரினால் உண்ணப்பட்டதன்று. அங்ஙனம் அவ்வுப்பை நீர் உண்டதாகமதிக்கப் படல்வேண்டுமேல் அவ்வுப்பின் சகலகுணங்களு நீங்கி நீரின் அளவையும் பெருக்கித்தான் ஒருக்காலு மீண்டுவாராத நிலைமையையடைதல் வேண்டும். "உப்போடப்பை மருவவிட்டும் ஐக்கிய முன்னிலருந்தாநிற்பேன்"* எனும் ஆன்றோர் மொழி ஏகதேச உவமையாகக்கொள்ளல்வேண்டுமேயன்றிப் பூரணஐக்கியத்திற்குத்திருஷ்டாந்தமாகாது. காய்ச்சியபாலின்மேற்படரும் ஆடையானது சிறிது சிறிதாக அப்பாலிலுள்ளநெய் மயத்தைஸ்வீகரித்துப்பெருகுவது உண்ணுதலாலுண்டாகும் வளர்தல் போலன்றோ வெனின், அப்படியன்று. முறத்திலிட்டுப் புடைக்குங்கால் உமி வேறு அரிசிவேறுகுதல் போலக் கலப்புண்டிருந்த இரண்டு பௌதிகங்கள் தனித்தனி பிரிதலே அன்றி ஒன்றைமற்றொன்று உண்டதாக இல்லை. இப்படியே இரசாயன சாஸ்திரப் பிரசித்தமான கந்தகஜநிதாதி சிலபௌதிகங்கள், தங்களுடைய ஆகருடணசக்தியால் நீரில் கலப்புண்டிருக்கும் தமக்கேற்ற வேறு பௌதிகங்களை இழுத்து அவற்றோடு முயங்கி வளர்வது போன்ற சிலஅற்புதத் தோற்றங்களைக் காட்டுமேனும், அவைகளுக்கு உறுப்போடமைந்த யாக்கையும் ஜீவராசிகளின் மூன்றாமிலக்கணமான பிரத்தியுத்பாதக சக்தியுமில்லாமையால் அவற்றை ஜீவராசிகளாக யாரும் மயங்கார்கள்.

5. பிரத்தியுத்பாதக சக்தி அல்லது பிற்கிளையாக்கம், என்பது சீவராசிகள் தங்கள் தங்களுடம்பிலிருந்து தம்மைப்போல உறுப்புகளமைந்த தம்சாதி உயிர்களையுண்டுபண்ணும் வல்லமைக்குப் பெயராம். இது மிருகவர்க்கத்துக்கன்றி மரவர்க்கங்களுக்கும் பொதுவான இலக்கணம். காயுண்டாதலெல்லாமிதன் பொருட்டே, ஒருகல் ஆயிரந்துண்டுபட உடைந்து தன்னைப்போன்ற உருவும் குணமுமுடையபல வாய்ப்பவிப்பதற்கும் பிற்கிளையாக்கத்திற்கும் உள்ளபெரும் வேற்றுமை எடுத்துக்காட்டாமலே புலப்படக்கூடியதன்றோ? ஒரு கல்லானது தனதுபூர்வஸ்திதியையிழந்தன்றிப் பலகற்களாகாது. மேலும் பலவாய்ச்சிதறிய கற்கள் ஒவ்வொன்றும் முன்னொன்றாயிருந்த கல்லைப்போலப்பருத்துப் பின்னும்இமிப்படி பலவாதற்குக்கூடியதுமல்ல. "நண்டுசிப்பி வேய்கதலி நாசமுறுங் காலத்துக் கொண்டகருவழிக்குங் கொள்கைபோல்"* சிலவுயிர்கள் பிற்கிளையாக்கத்தால் தம்முடலழிவதுஇயல்பே: ஆயினும், அப்பிற்கிளைகள் காலக்கிரமத்தில்வளர்ந்து ஒன்று பலவாகத்தாமும் பெருகுவதனால் இவற்றின் பிரத்தியுத்பாதகத்திற்கும் கல்லுடைதலுக்கும் வேறுபாடு பெரிதாம். இம்மூன்றிலக்கணங்களிலொவ்வொன்று சிற்சில இடங்களில் புறநடையாகப் பிற பொருள்களுக்குக் காணப்படுமாயினும் மூன்றிலக்கணமு மொன்றாகப் பொருந்துவது சீவராசிகளிடத்து மாத்திரமேயாம்.

6. கூறிய மூன்றிலக்கணங்களும் சீவராசிகளைச் சடபதார்த்தங்களிலிருந்து பிரித்தறிந்து கொள்வதற்குப் போதுமாயினும், அச்சீவராசிகளின் விசித்திரங்களையும் குணவைபவங்களையும் நன்கறிதல்வேண்டுமானால் அவற்றை வெவ்வேறு பிரிவுகளாய்ப் பகுத்து ஒவ்வொரு பிரிவுக்குமுள்ள விசேஷ லக்ஷணங்களைச் சோதித்தலாவசியகம். இதோநிற்கிறமரமும் இதில் கட்டியிருக்கிற பசுங் கன்றும் உயிருடையவை யெனுந்தன்மையில் ஒப்பேயாயினும் மற்றெல்லா விஷயங்களிலும் எவ்வளவு வேறுபாடுடையன! உயிரிலக்கண மாராய்வோர் முதலில் ஜீவராசிகளை இருபெரும்பிரிவுகளாகப்பிரிக்கின்றார்கள்.

முதலாவது ஸ்தாவரமல்லது மரவர்க்கம்.

இரண்டாவது சரம் அல்லது மிருகவர்க்கம்.

இப்பிரிவு சாமானிய நித்திய அநுபவத்திற்கும் ஒத்ததாக நிற்கும். ஆயினும் அவற்றிற்குள்ள நுண்மையான பேதா பேத நிர்ணயம் அருமையான சாஸ்திரவிசாரணைகளிலொன்றாகஇருக்கின்றது. நீர் வாழ்செந்துக்களாகிய கண்ணுக்குப் புலப்படாத பல பொடிப்பூச்சிகளுக்கும் அத்தன்மையான சில பாசியினங்களுக்கும் வேற்றுமைகண்டுபிடித்தல் சிற்சில சமயங்களில் கருவிகளின் துணையாலுங்கூட அரிதெனச்சொல்வார். இவ்வித நுண்ணிய ஆராய்ச்சிக்குத் தக்க தருணம் பின்வருமாயினும், சீவ

* தாயுமான ஸ்வாமிபாடல்.

* ஔவையார்.

ராசிகளின் பெரும் பிரிவுகளான மரவர்க்கத்திற்கும், மிருகவர்க்கத்திற்கும் உள்ள முக்கிய வேற்றுமையை ஒருவாறு முதலில் நிச்சயித்துக் கொள்வோமாக.

7. பொதுவாக இவ்விருபிரிவுகளையும்ஒத்துப் பார்க்கில், மிருகவர்க்கத்திற்கு அவயவிபாவம், விர்த்திக்ஷயம், பிரத்தியுத்பாதநம் ஆகிய மூவகைப் பொது இலக்கணங்களுடன் கூடுதலாக இரண்டு சிறப்பிலக்கணங்களு முண்டெனக்காணலாம். அவையாவன:— (1) பிறபொருள்கள் தம்முடம் பின்மேல் பலவாறு தாக்குதலை யுணர்தலும், (2) அப்படித்தாக்குதலுக் கேற்றவாறு இடம்பெயர்ந்து தாமேசலித்தலும் ஆகிய இவ்விரண்டே. மாலைக்காலத்து நாம் தெருவில் உலாவுங்கால், வழியில் கிடப்பது பழுதையோ பாம்போ வெனும் ஐயம் தெளிவதற்கு, யாதேனும் ஒருகட்டையோ ஒருபிடி மணலோ எடுத்து அதன்மேல் எறிந்து, அப்படி யெறிந்தபொருளின்தாக்குதலால் சிறிதேனும் சலநம் பிறவாவிடில் பழுதைதானென்றும், பிறக்கில்,பழுதையன்றுபாம்பேஎன்றும் நாம்துணிந்துகொள்வது மேற்கூறிய இலக்கணத்தின் உண்மையைவிளக்கிக்காட்டுகின்ற தல்லவா? பிறபொருள்கள் தம்மேற்றொடின் அத்தாக்குதலையுணருகிறதற்குமிருகவர்க்கங்களிடத்தில் அமைந்து கிடக்கும் உறுப்பிற்கு பொதுவாகப் புலன் என்றும் அத்தாக்குதலுக்கேற்கச் சலிக்கும்படி அவைகளிடத்தில் அமைத்திருக்கும் உறுப்பிற்குப் பொதுவாகப்புலால்என்றும் பெயர்கூறலாம். மனிதர் சரீரத்திலும் யானை,குதிரை,ஆடு,மாடுமுதலிய வுயர்ந்த விலங்கினங்களின் உடம்பிலும் உள்ள ஞானேந்திரிய கருமேந்திரிய உறுப்புக்கள் அனைத்தும் இப்புலன் புலால் என்ற பொது உறுப்புக்களின் விகற்பங்களேயாம். கண், காது, மூக்கு நாக்கு ஆகிய உயர்ந்த புலன்களில் சிற்சில இல்லாவிடினும் பஞ்சேந்திரியங்களுள் ஆதியிந்திரியமாக இருக்கின்ற 'துவக்கு' அல்லது 'மெய்' இல்லாத மிருகங்கள் இல்லை. அப்படியே கை கால் முதலிய கருமேந்திரிய விகற்பங்கள் இல்லையாயினும், சிறிதேனும் அசைதற்குக் காரணமாயிருக்கும் ஒருவரிப்புலாலேனும் இல்லாத புழுவோ பூச்சியோ இதுகாறும் கண்டதில்லை. ஆனல் மரவர்க்கத்துள் அகப்பட்ட "தொட்டால்வாடி" முதலிய சிற்சில புற்பூண்டுகள் அவற்றின்மேல் யாதேனும் ஒருபொருள் விழுந்தால் கூச்சமுற்றவைபோலத்தங்கள்இலைகளைச் சுருக்கிக்கொள்வதினல், மிருகவர்க்கத்திற்கே யுரித்தெனக்கூறிய வுணர்தல் சலித்தல் என்னும் இரண்டு இலக்கணமும் அதிவியாப்திதோஷத்தால் பழுதாகாதோ எனின்; அது சரியே, இத்துணை உதாரங்களைக்குறித்தே தொல்காப்பியரும், "புல்லு மரனு மோரறிவினவே பிறவுமுளவே யக்கிளைப் பிறப்பே" எனச் சூத்திரம் கூறினர் போலும்; ஆயினும் பெரும்பான்மை சிறுபான்மை நோக்கியே பெரும்பிரிவுகளாக ஏற்படும் ஸ்தாவர சர வுயிர்பேதஇலக்ஷணம்நிர்ணயிக்கக் கூடுமாதலின், அங்கங்கு மிகவும் அருமையாகத் தோற்றும் இத்தகைய வழுக்களைப் புறநடையாகக் கொள்ளுதல் நூலொழுங்கும் ஆன்றோர் வழக்குமுமாக இருக்கின்றது. இதுபற்றியே மிருகவர்க்கத்திற்கும் மரவர்க்கத்திற்கு முள்ள வேற்றுமை வரையறுத்து வகுத்தல் அரிதென முன்னரே கூறப்பட்டது. ஆயினும் 'தொட்டால் வாடி' முதலிய நங்கண்ணுக்ககப்படும் புற்பூண்டுகளின் சலநம், இலையாகிய ஒரே உறுப்பிற்கன்றி மற்றையங்கங்களுக்கில்லாமலும் அவை முற்றிலும் இடம்பெயர்ந்து இயக்கமுறும்வலிமை பெறாமலும் இருப்பதினல் நாம்கூறி நிறுத்தியஉணர்தல் சலித்தல் என்னும் இரண்டு இலக்கணங்களுமே மிருகவர்க்கத்தையும்மரவர்க்கத்தையும் பிரித்துஅவற்றிற்குள்ள வேற்றுமையை விளக்கப்போதுமாக அமைகின்றன.

ஜீவராசிகளின் பெரும் பிரிவுகளாகிய ஸ்தாவரம் சரமென்னும் இவற்றின் உட்பிரிவுகளையும் விசித்திரங்களையும் சோபானக்கிரமமாக சந்தர்ப்பம் வாய்த்தவழி யினிமேல் சோதிப்போம்.

திருவனந்தபுரம்
11-ஆகஸ்டு 1892 } P. சுந்தரம்பிள்ளை, M. A.

## பெண்கல்வி.

"கண்ணுடையரென்பவர் கற்றோர் முகத்திரண்டு
புண்ணுடையர் கல்லாதவர்."—குறள்

பெண்கள் கல்விகற்கல் வேண்டியது ஆவசியகமென்பது இத்தேசத்தார் யாவருடைய அறிவிற்கும் புலப்படல்வேண்டிய விஷயமே;ஏனெனில், அவர்கள் உலகவாழ்க்கையில் தாங்கள்

எவ்வாறு நடந்துகொள்ளல் வேண்டுமென்பதையும், தங்கள் குழந்தைகளை யெப்படி வளர்க்கல் வேண்டுமென்பதையும், கொஞ்சங்கூட அறியாதவர்களா யிருக்கிறார்கள். "தொட்டிற் பழக்கஞ் சுடுகாடு மட்டிலே." என்னும் பழமொழியின்படி, தாய்தந்தையர் தங்குழந்தைகளைச் சிறுவயதில் எவ்வழியிற் கொண்டுவருகிறார்களோ அம்மாதிரியான குணங்களையும் நடக்கையையும் வாணாள் முழுதும் விட்டகலாராகையால், அவர்களை இளமையிலேயே துர்க்குணங்களைக் கற்கவொட்டாமல், பிற்காலத்தில் அவர்களுடைய சமுசாரம் உத்தியோக முதலியவற்றிற்கு உபயோகமாயும் பலனைத் தருவதாயுமுள்ள, வாய்மை, அடக்கம், தெய்வபக்தி, முதலிய நற்குணங்களைக் கற்பிப்பதற்குப் பெண்கல்வி யின்றிமையாததா யிருக்கின்றது.

இத்தன்மையான நல்லுணவை யூட்டுவதற்குத் தகுதியானவர்கள், அக்குழந்தைகளோடு வீட்டில் எந்நேரமும் பழகிக்கொண்டிருக்கிற அன்னைமார்களே யென்பது பசுமரத்தில் ஆணி யறைந்தாற்போலும் உறுதியாக நாட்டப்படும். ஏனெனில், தாயின் பேதைமையினாலே சன்மார்க்கத்தை யடையாத எத்தனை குழந்தைகள் தங்களுக்கு வயது வந்தபொழுது புத்தியீனர்களாய் ஊக்கம் முயற்சி முதலியவையின்றிச் சோம்ப லதிகரித்துச் சோற்றிற்குக் கேடும் மண்ணிற்குப் பாரமுமாக வீண்காலங் கழிக்கின்றார்கள். பாருங்கள்! ஒருகுழந்தை உலகமின்னதென்றும் தெய்வமின்னதென்றும் தெரியாத சிறு வயதிலேயே, தீத்தொழிலொன்றுஞ் செய்யாமல், நற்காரியங்களைச் செய்துகொண்டும், கடவுளைப் பிரார்த்தித்துக்கொண்டும் வருகின்றது. கடவுளைச் சந்தோஷப்படுத்தும் பொருட்டோ இப்படிச் செய்வது? தனக்கு அவைகளைக் கற்பித்து, இன்னின்ன காரணங்களினாலே இன்னின்ன விதமாக நடக்கல் வேண்டும்; இல்லாவிட்டால் தண்டிப்பேனென்று பலவாறாகப் போதிக்கின்ற தாயைத் திருப்திசெய்யல் வேண்டுமென்னும் எண்ணத்தாலன்றோ? இன்னொரு குழந்தை தாயினது மூடத்தனத்தினால் திருடவும் வையவும் தூண்டப்பட்டு, துர்க்குணங்களில் தேர்ச்சியடைந்து சிறைச்சாலைக்குப் பாத்திரவானா யிருக்கிறதையும் காண்கிறோம். ஆகையால் வீடுகள்தோறும் குழந்தைகளுக்குத் தாய்களா யிருக்கும் பெண்கள், குழந்தைகளுக்கு நல்லறிவு ஊட்டுங் கல்வியில் தேர்ச்சியடையல் வேண்டியது மிகவும் முக்கியமான காரியமென்பது, உள்ளங்கை நெல்லிக் கனிபோல் தெளிவாகத் தோன்றவில்லையா?

இக்காலத்தில் மாதர்களைப் பூத்தையல் வேலையிலும், உடுப்பு முதலியவற்றைக் கத்திரித்துத் தைப்பதிலும், பயிற்றுகின்றார்கள். இவ்வேலைகள் வீணல்ல. ஆயினும் பெண்களைக் கல்விப் பயிற்சியில் விருத்தியடைவிக்கல் வேண்டியது அவைகளினுஞ் சிறந்ததென்பதற்கு ஆக்ஷேபனையில்லை. ஒரு செடியை இளமையிலேயே வளைத்தால் எளிதாய் வளைந்துவிடும்; பருத்து முற்றிப்போய் விட்டபிறகு வளைப்பது கஷ்டமான விஷயமென்பதை யறிந்திருந்தும், எவ்விதப் போதனைகளையும் உட்கொள்ளத்தக்க இளமைப் பருவத்திற் பெண்களுக்கு வித்தை கற்பிக்காமல், அவ்விளமைப்பருவம் போமளவுஞ் சும்மாவிருந்து, கைச்சாதுரியம் மட்டும் அடையும்படி செய்கிறார்கள். இதனால் பெண்கள் விசேஷமாய்க் கற்று, ஆண்மக்களைப்போல் தங்கள் வித்தையுயர்வால், இராஜாங்கத்தில் உயர்ந்த உத்தியோக முதலியவற்றை யடையல் வேண்டுமென்பது எம்மனோர் கருத்தன்று. நன்மை தீமையென்பதைப் பகுத்தறிந்து தாங்கள் நடந்துகொள்ளும் பொருட்டும், தங்கள் குழந்தைகளை நல்லவழியில் நடத்தும்பொருட்டுமென்றித், தாய்தந்தையர்கள் புத்தியுள்ளவர்களாயும், படித்தவர்களாயும் சற்குணிகளாயுமிருந்தாலன்றிப் பிள்ளைகளுக்கும் அக்குணங்கள் அமைதல் முடியாது என்னும் சுபாவ நியமத்தின்படி, சற்புத்திர பாக்கியத்தை யடையும்பொருட்டும், மாதர்கள் கற்கல் வேண்டுமென்பது தானே விளங்கும். இது நிற்க, நம் முன்னோர்களுடைய இல்வாழ்க்கைக்குப் பெண்கல்வி அவ்வளவு ஆவசியகமில்லாததா யிருந்தபோதிலும், தற்காலத்து அங்கிலேயப் பயிற்சியுள்ள நம்மவர்களின் மனைவியர்கள், படித்திருந்தாலன்றித் தம் கணவர்களுக்கு இன்பம் விளைக்கார். நம்தேசத்தில் கல்வி பரவப்பரவப் பெண்கல்வியின் இன்றியமையாமையும் நன்றாய்

விளங்குகிறது. இவ்வாறு படித்த நாயகர்களுக்குச் செய்யல் வேண்டிய கடமைகளைச் செய்யச் சக்தியற்றவர்களா யிருக்கின்றார்க ளாகையால், அந்நாயகர்கள், தாழ்ந்த புத்தியுள்ள மனைவியரொடு சம்பாஷிப்பதைக் காட்டிலும் படிப்பதும் கற்றுணர்ந்த நண்பரொடு கூடிப் பேசுவதும் உசிதமென்று நினைத்தல் நியாயமே. இப்படிப் பெண்கள் மூடர்களாயிருந்து தங்கள் கணவரை மனவருத்தப் படுத்துவதற்கு மூலம் அவர்கள் பெற்றோரும் உடன்பிறந்தோருமே யென்பது சொல்லாமே விளங்கும்.

தற்காலத்தில், பொதுவாக, பெண்களைப் பார்க்கிலும் புருஷர்கள் அதிக புத்திசாலிகளா யிருப்பதற்குத், தொன்றுதொட்டு வந்த புத்தி விருத்தியின்மையும், உள்ள புத்தியை அபிவிருத்தி செய்யாமலிருத்தலுமே காரணமாம். இவ்விதமாகப் பெண்களுக்குக் கல்விப்பயிற்சி மறுக்கப்பட்டிருப்பதற்கு மூலமான ஆக்ஷேபனைகளைச் சிறிது ஆராய்ச்சி செய்து களைந்தெறிவோம். பெண்களுக்கு ஆண்மக்களைப்போல கல்விகற்பதற்குப் போதுமானநேரமில்லையென்பார் சிலர். ஆண்மக்களது பலவித உத்தியோகங்களையும், பெண்கள் வேலையின்றி வீட்டில் வீண்பொழுது போக்குவதையும் பற்றி யோசிக்கின், இவ்வாக்ஷேபனை பொருந்தாதென்பது விளங்கும். பெண்கள் கற்பார்களானால் அகங்காரமுடையவர்க ளாவார்களென்றும், அவர்களுடைய அடக்கம், நாணம், அச்சம் முதலியவைகளைக் கடந்து தங்கள் விவேகத்தை வெளிப்படுத்துவதற்காகப் பகிரங்கத்துக்கு வருவார்களென்றும், சொல்லுவர் சிலர். ஒருவருக்குக் கர்வ முண்டாவது மற்றவர்களிடத்தில்லாத குணம் தம்மிடத்தில் மாத்திர மிருந்தாலன்றோ? ஒருஊருக்கெல்லாம் ஒரே மாடவீடு இருந்தால் யாவர்க்கும் அது ஆச்சரியமா யிருக்கும். ஊரெல்லாம் வீட்டுக்கு வீடு மாடமாயிருந்தால் அது சாதாரணமாய்விடும்; வியப்பிற்கும் இடமில்லை. அதைப்போலவே பெண்களுக்குள்ளும் ஒருத்தியிடத்திலேயே கல்வியிருக்குமாயின் அகங்கார முண்டாவதற்கு இடமுண்டு. பெண்களெல்லாருமே கற்றவர்களாயிருந்தால் வித்தியா கர்வம் ஒருநாளு முண்டாகாது. சிலர், கற்றபெண்கள் வீட்டு வேலைகளில் அசாக்கிரதையா யிருப்பார்கள் என்று மயங்குவர். கல்விப்பயிற்சியால் மடமையின் விளைவான அசாக்கிரதை யுற்பத்தி யாகுமென்பது யாவரும் சிரிக்கத்தக்கது. இதுவுமன்றி, கற்பதினால் பெண்கள் ஆண்மக்களை மதியாரென்றும், எல்லாப்பெண்களும் படிப்பு மார்க்கத்தில் திரும்பிவிட்டால், சமையல் முதலியவீட்டுக்காரியங்கள் தடைப்படுமென்றும் கூறுவாருமுளர்.

"கல்விநலம் பெற்றனரேல் 1காரிகையார் 2காதலர்க்குச், சொல்லரு நற்றுணையன்றோ? 3 தொல் உலகு சிறக்கு மன்றோ?, 4மெல்லியர்பாற் கல்வி விரும்பாத வீணரெலாம், எல்லையிலா இன்பமதற் கிடையூறென்றே யியம்பாய்*."

கற்றோர்கள் வேலையை யிகழ்வார்களென்பது நம்பக் கூடியதல்ல. அன்றியும் எல்லாப் பெண்களும் படிக்கவுமாட்டார்கள்; படிப்பதும் அசாத்தியம். ஆகையினால், பெண்கல்விக்கு ஆக்ஷேபனைகளாகக் கொணர்ந்தவைகளெல்லாம் வீணென மறுக்கப்பட்டன. மகாநாடு கூடியபோது நம் தேசத்திற்காகப் பேசிப் பாடுபட்ட பண்டித ராமாபாய் முதலிய கல்வியில் தேர்ந்த பெண்மணிகளைப்பற்றிக் கேள்வியுற்ற மாதர்களுங் கூடப் படிக்கவிரும்புவார்களென்பதிற் சந்தேகமில்லை. தற்காலத்திற் பள்ளிக்கூடங்களில் வாசித்து பி. ஏ. முதலிய பட்டங்களைப்பெறும் பெண்கள், தேசத்திற்கு ஆபரணங்களா யிருந்த போதிலும், எல்லாப்பெண்களும் அவ்வளவு தூரம் படிக்கல் வேண்டுமென்பது எமது முக்கிய கருத்தன்று, மாதர்களுடைய புத்தி விசாலப்பட்டு, அவர்கள் நன்மைதீமை யறிந்து நடந்து, தங்கள் நாயகர் மனத்தைச் சந்தோஷிப்பித்துத், தங்கள் குழந்தைகளைச் சன்மார்க்கத்திற் செலுத்தி, அதிக போகமும் கீர்த்தியுமடைந்து இல்லறம் நடத்துவதற்காகவேகல்விகற்கல்வேண்டியது. ஆகையால் பெண் கல்வியின் பிரயோசநமும், ஆவசியகமும், இவ்வளவென்று எம்மாற் சொல்லிமுடியாது. இப்பெண் கல்வியைப்பற்றி நம்மவர்களில் அநேகரும் பிறதேசத்தாரில் அநேகரும் எழுதி யிருக்கிறார்கள். பெரியோர்கள்

* தத்தை விடுதூது.—15.
1. பெண்கள். 3. பழைய.
2. கணவர்கள். 4. பெண்கள்.

சொல்லியிருப்பதையும், எம்மறிவில்தோன்றிய சிலவற்றையும் எல்லோருக்கும் சம்மதமாயிருக்குமென்னும் நம்பிக்கையுடன் எழுதினேன்.

ம. சோ. விசுவநாத முதலியார், B. A.

## 'மனோன்மணீயம்'

"எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருண்
மெய்ப்பொருள் காண்ப தறிவு."—குறள்.

"வழக்கமே மாந்தர்களின் செவிலித்தாய்," என்று கோலரிட்ஜ் என்பவர் கூறினது மெய்யே. அம்மொழியின் உண்மையை நம்மவர்களுக்குட் பரக்கக் காணலாம். புத்தியையும் சௌக்கியத்தையும் பழமையின் கோவிலில் தாங்கள் பலிகொடுப்பது மன்றி, அங்ஙனஞ் செய்யாச் சிலரையும் பழித்துப் "பிறப் பொழுக்கங் குன்ற"க் கெட்டவர்களாக மதித்தலே பெரும் பான்மையோரின் தொழிலா யிருக்கின்றது. மதாசாரங்கள் தவிர்த்து, இலக்கியத்தைச் சார்ந்த விஷயங்களிலும் இவ்வெண்ணத்தின் பயனைக் காணலாம். பிற்காலத்துத் தமிழ்ப் பாவலர்கள் முற்காலத்தோரின் பிழைகளில் மாத்திரந் தேர்ச்சி யடைந்தார்கள். அன்று, பிற்காலத்து மிகுதி பற்றியே யவை பிழைகளாயின. சிலரான கவிவாணர்களும் புலமையின் மெய்ப்பொருளை யறியாராய்ச் சிலேஷைகளையும் அதிசயவணிகளையுங்கண்டு மருண்டு, மின்னுவ தெல்லாம் பொன்னெனக் கொள்ளும் பேதைமை வசத்தினராய், வேசையர் பாற்சென்ற ஆடவர்களைப்போற் புகழின்றி வலியழிந்து வாணாட்களை வீணாட்களாய்க் கழித்து மாண்டார்கள். வழக்கம் என்னும் ஆற்றை யெதிர்க்க அஞ்சினராய் மறதியென்னும் ஆழ்கடலிற்சேர்க்கப்பட்டு மூழ்கிப் போனார்கள். அந்தோ! அவர்களை நினைக்குந்தோறும் என்மனம் பரிதபிக்கின்றது.

வழக்கங்களாகிய இருப்புத் தளைகளைத் தறிக்காமல் விருத்தியை விரும்புதல், முடவனொருவன் கொம்புத்தேனுக்குப் பெட்புற்றாற் போன்றது. ஆகவே, விருத்திக்குத் தடைகளாயுள்ள வழக்கங்களை யெதிர்க்கும் வழிகாட்டிச் செல்வோரை அறிஞர்கள் தேசோப காரிகளாக மதித்துப் புகழல் வேண்டும். ஆதலின், "கொடு மலையாளக் குடி யிருப்பு" உடையோராகிய, ம-ா-ா-ஸ்ரீ எம். ஏ. சுந்தரம் பிள்ளை யவர்களாலியற்றப்பட்ட நவீனநூலாம், 'மனோன்மணீயம்' என்னும் நாடகத்தை, வழக்கத்தையே வாழ்த்திவணங்கும் 'பண்டிதர்கள்' எவ்விதங் கணித்தபோதிலும், நாடகங்களுள்ள பாஷைகளிற் பயின்றுள்ளோர் "பெற்றோமென வுகந்து" களிப்புடனும் ஆவலுடனும் படிப்பரென்பது ஐயுறற்பாலதன்று. தமிழ்ப் பாஷையின் விருத்தியைக் கருதுவோர் யாவரும் இப்புத்தகத்தை வாங்கி வாசித்தல் வேண்டுமென்பதுந் திண்ணம்.

நம்புராணங்களில் இலதாதலினால், இந்நாடகத்தில் அமைந்துள்ள கதையை விரித்துக்கூறுவோம்.

மூற்காலத்தில்,

" தரணியே பசுவெனச் சாற்றலு மற்றதிற்
பரதமே மடியெனப் பகர்வதுஞ் சரதமேல்,
பால்சொரி *சுரை."

யென "விளம்பாதே விளங்கும்" தென் பாண்டி நாட்டில், முதுநகராகிய மதுரையில், ஜீவகவழுதி† என்றோர் அரசனிருந்தான். அவன் களங்கமற்ற நெஞ்சினனானதால் "எடுப்பார் கைப்பிள்ளை" யாயிருந்தான். அவன் அமைச்சனாகிய குடிலன் என்பவன், அளப்பரிய சூழ்ச்சித்திற முள்ளவனும், தன்னயங்கருதி முடிப்பதில் எத்தொழிலும் புரியத் துணிந்தவனும், வரம்பற்ற பேராசை யுள்ளவனும், நன்றியறிதலையறியானும், சமயத்துக்குத் தக்கபடி நடந்துகொள்ளும் பாசாங்குக்காரனுமாயிருந்தான். அரசனைக் கைவசப்படுத்திக்கொண்டபின், தன்னிஷ்டப்படிசெய்யக், கூடல்மா$நகர் இடங்கொடாதென நினைத்து,

" அமிழ்தினுஞ் சிறந்த தமிழ்மொழி பிறந்த
மலயகின்றிழிந்து, விலையுயர் முத்தும்
வேழ*வெண் மருப்பு+ம் வீசிக்காழகிற்§
சந்தனடவியுஞ் சாடிவந்துயர்
குங்குமமுறித்துச் சங்கின மலறுந்
தடம்பணை‡ தவிழ்ந்து, மடமயின டம்பயில்

*சுரை—மிருகங்களின்முலை †வழுதி—பாண்டியன்.
* யானை. + கொம்பு. ‡ வயல்.
§ காழ்—அகில். (காழ்—வைரம்)
$ மதுரை-அடவிகாடு.

"வளம்பொழில் கடந்து குளம்பல நிரப்பி,
யிருகரை வாரமுந் திருமக ளுறையுளாப்
பண்ணிய புண்ணிய தாமிரவர்ணி" நதி

பாயப்பெற்ற நாட்டின் தலைநகராகிய திருநெல்வேலியிற் கோட்டை கொத்தளம் முதலியன இயற்றுவித்து,ஆங்குச் சென்றுறையும்படி வேந்தனுக்குப்போதிக்கக்,சுத்தனாகிய ஜீவகனும் அங்ஙனஞ் செய்தனன்.

நாடகர்த்தரின் பெயர்தரித்தபாண்டியகுல குருவாகிய சுந்தரமுனிவரென்பவர், அரசன் மாட்டு அன்புள்ளவராதலின் நெல்லைக் கெழுந்தருளி, அரசன் இறுமாப்பை வெறுத்து,

"அன்பே யுயிரா யழகே யாக்கையாய்
மலைமகள்* கருணையுங் கலைமகளுணர்வுங்
கமலை||யி னெழி¶லு மமையவோ ருருவாய்ப்
பாண்டியன் தொல்குல மாகிய பாற்கடல்
ஈண்டெழு மதியென ஈண்டவ தரித்த
மனோன்மணி யன்னை"

யின் க்ஷேமத்தைக் கருதி, சில கிரியா விசேஷங்கள் செய்யவேண்டுமென ஓர் அறையின் திறவுகோலைப் பெற்றுக்கொண்டு சென்றனர். இம் மனோன்மணி பதினறு பிராயமுள்ள பெண். குழந்தைப் பருவத்துக்குரிய கபடமற்ற சுத்த மனத்தையுடையவள். தன்தகப்பன்பால் மிக்க வாஞ்சையுடையவள். இவளுக்கு வாணியென்றொரு தோழியிருந்தாள். அவள் உலக நடைகளிற் பழக்கமுள்ளவள். "ஒழுக்கந்தவறு உளத்தள். தனக்கு நன்றெனத் தெள்ளிதில் தெளிந்தவையே நம்புந் திறத்தள். அல்லனவற்றை யகற்றுந்துணிபு முடையள்" இவள் நடராஜன் என்ற ஒரு அழகுள்ள புருஷனைக் காதலித்திருந்தாள். அவனும் வாணியை நேசித்திருந்தான். அவனுடைய குணமும் நடைகளும் நம்மவர்களுக்குப் புதிய வாய்த் தோன்றும். தமிழ்க்காவியங்களில் அவன்குணத்தினரிலர். அவன் தனி மொழிகளில் அங்கிலேயப் பயிற்சியைப் பரக்கக்காணலாம். அவன்போன்ற இயற்கைச் சாஸ்திரத்தில் தேர்ந்த ஆநந்த புருஷர்கள், தங்கள் பேரறிவைச் செய்கைகள் மூலமாய் வெளிப்படுத்தின், பரோபகாரமா யிருக்கு மென்பது திண்ணம். அங்ஙனஞ் செய்யாவிடின் வெளிப்புறத்தையே நோக்கும் வெள்ளியர்கள், 'பேயன்' எனவும், 'பித்தன்' எனவுமே நினைப்பார்கள். ஆகவே, பணப்பேய் பிடித்த வாணியின் பிதாவாகிய சகடரென்பவர், தன்மகளைக் குடிலன்மகனாகிய பலதேவன் என்பவனுக்கு விவாகஞ்செய்து கொடுக்க விரும்ப, அவள் அதற்கு இசையாளாக, மனவருத்தத்துடன் வேந்தன் அவையிற் சகடர் முறையிட, ஜீவகன் அவ் விவாகத்தை நிறைவேற்றுவிக்க ஒப்புக்கொண்டான்.

மனோன்மணியும், வாணியும் கழல்விளையாடும் களம் வெகு அழகாயிருக்கின்றது. தவத்தை விரும்பின மனோன்மணிக்கு, மதன் கணையாற் புண்ணுற்றவாணி, 'நூறுக்கேட்கினு நூலறிவென்செயும்? நீறுகின்ற தென்னெஞ்சம்.' என்றுசொல்லுதல் இயல்பே.

வாணியின் மனவருத்தத்தினால் காதலைப் பற்றிப் புதிதாய் நினைக்கத்தொடங்கின மனோன்மணி, 'பூருவகருமபரிபாகத்தால்' சேரதேசத்தரசனாகிய புருஷோத்தமனைக் கனவிற்கண்டு மோகித்துக் காமசுரம் கொண்டனள். இதை யறியாச் செவிலி, மனோன்மணியின் நிலையைக் கண்ணுற்று மனநடுங்கித் தன்னாலியன்றமட்டும் வைத்தியம் செய்தும் பிரயோசனப்படாதது கண்டு, அரசனிடந் தெரிவிக்க, ஜீவகன் மனங்கலங்கி மகளிடம்வந்து சேர்ந்தனன். மனோன்மணியைப் பலவாறு வினவியும், அவள் ஒன்றுஞ்சொல்ல அறியாளாய் அழுவதைக்கண்டு, தங்களைப்பெற்றோர் உற்றோர்களுக்கும் துக்கத்தை விளைத்துத் தாமும் அழும் பெண்களின் பேதைமையை நொந்து, உதாரணமாக வாணியின் நடையை யெடுத்துரைத்தான். இவ்விடத்தில், காதலின் மெய்க்குணத்தையும், விவாகத்தை வியாபாரமாகப் பாவித்து நடக்கும் நம்மவர் மடமையையும் அறிந்துகொள்ளலாம்.

"நேசமில் வதுவை* நாச காரணமே."

சரி : நேசமென்றாலென்ன ? பெண்ணுக்கு நகைகள் செய்து போட்டுவிட்டால் நேசம் தானே யுண்டாகாதோ? பெற்றோர் ஒன்று நினைக்க நேசம் மற்றொன்று நினைக்குமோ ? என்று வினவுவார்க்கு விடையாதெனின்:—இஃதே.

" நேயமும்
ஆக்கப்படும் பொருளாமோ? நோக்கில்,

* பார்வதி. || இலக்ஷிமி. ¶ எழில்—அழகு.

* வதுவை=கலியாணம்.

துன்பமே நிறையும் மன்பேருலகாம்
எரியும் கானல் விரியும் பாலை†யில்
திரியும் மனிதர் நெஞ்சம் சிறிது
தங்கி, அங்கு அவர் அங்கங் குளிரத்
தாரு*வாய்த் தழைத்தும்; ஓயாத் தொழிலில்
நேரும் தாகம் நீக்குவா னிமல
ஊற்று யிருந்தவர் உள்ளம் ஆற்றியும்;
ஆறு அலைக்கள்வர் அறுபகை மீறில்,
உறுதுணையாய் அவர்நெறி முறை காத்தும்,
முயற்சியாம் வழியில் அயர்ச்சி நேரிடில்,
ஊன்றுகோலாய் அவர் ஊக்கம் உயர்த்தியும்,
இவ்விதம் யாரையும் செவ்விதிற் படுத்தி,
இகத்துள சுகத்திற்கு அளவு கோலாகிப்,
பரத்துள சுகத்தை வரித்த சித்திரமாய்,
இல்லறம் என்பதன் நல்லுயிரே யாய்,
நின்ற காதலின் நிலைமை, நினையில்,
இரும்பும் காந்தமும் பொருந்துந் தன்மைபோல்,
இருவர் சிந்தையும் இயல்பா யுருகி
ஒன்றும் தன்மை யன்றி, ஒருவரால்
ஆக்கப்படும் பொருளாமோ?"

இவ்விதம் ஆக்ஷேபித்துப், பலதேவனை வேட்டலினும் கன்னியா யிருப்பதே யுத்தமமெனத் துணிந்த வாணியை நோக்கி ஜீவகன்

"கன்னியா யிருக்கிலுன் னழகென்னும்?
அரைக்கி லன்றோ சந்தனங் கமழும்?"

என்று வினவ, கறையானரிக்கிற் கமழுமோ சந்தனம்? என்று வாணிகேட்டாள். இங்ஙனம் இவர்கள் வாதஞ்செய்து கொண்டிருக்குங்காற் சுந்தரமுனிவர் வந்தனர்.

ஐந்து நாட்களுக்குட் பலதேவனை மணம்புரியச் சம்மதித்தல் வேண்டுமென வாணிக்குச் சொல்லிவிட்டு, அரசன் முனிவரை யுபசரிக்க, அவர் மனோன்மணியின் வேறுபாட்டைக் கண்ணுற்றுக் காரணம் வினவினர்; மனோன்மணி "சொல்லவல்ல தொன்றிலை. சுகமே" யென்று விடையளிக்க, அடங்கா மனக்கவலையுடன் செவிலி மனோன்மணியின் மாறுபாடானநடைகளை விவரிக்கத் தொடங்கினாள்:—

"மீண்ணாள்[1] மேனியும்; உண்ணாள் அமுதும்;
நண்ணாள் ஊசலும்; எண்ணாள் பந்தும்;
முடியாள் குழலு[2]ம்; படியாள் இசையும்;
தடவாள் யாழு[3]ம்; நடவாள் பொழிலு[4]ம்;
அணியாள் பணியு[5]ம்; பணியாள் ஏவலும்;
மறந்தாள் கிளியும்; துறந்தாள் அனமும்;
தூங்குவள் போன்றே யேங்குவள்; எளியை!
நோக்குவள் போன்றே நோக்குவள் வெளியை;
கேட்டுங் கேட்கிலள்; பார்த்தும் பார்க்கிலள்;
மீட்டுங் கேட்பள்; மீட்டும் பார்ப்பள்;
தனியே யிருப்பள்; தனியே சிரிப்பள்;
விழிநீர் பொழிவள்; மெய்விதிர்த்து அழுவள்;"

காமசுரத்தால் தகிக்கப்பட்டோரின் செய்கைகள் நன்றாய் வருணிக்கப்பட்டிருக்கின்றன. ஆனால், கனவினால் மாத்திரம் இவ்வளவு நேரிடுமோ என்று சிலர் திகைக்கலாம். இதன் உண்மையை யுணராராயின் அஃது அவர் குற்றமே. நம்தேசத்தில் தேகத்தை யிளைக்கச் செய்யும் என்று சாதாரண ஜனங்கள் கூறும், கனவில் தோற்றும் 'மோகினி'யை வைத்தியர் ஓர் வியாதியென்று கூறுவர். இவ்விதத் தோற்றங்களுக்கு மனமே காரணம். காமநோய் கொண்டார்க்கு மரங்களுஞ் செடிகளுங்கூடத் தாங்கள் காதலித்தோராய்த் தோற்றுவதுண்டு என்று கூறுவது வழக்கம். 'உருவெளித்தோற்றம்' என்பதும் இவ்வெண்ணம் பற்றியே உண்டாவது. இவை யெல்லாம், உரிய பருவங்களில் நன்கு விளங்கும்.

"குழவிப் பருவம் நழுவுங் காலை
களிமிகு கன்னியர் உளமும் வாக்கும்
புளியம் பழமும் தோடும் போலாம்."

இவையெல்லாம் அநுபவித்தோர் உடனே யறிந்து கொள்வார்கள்.

சுந்தரமுனிவர் காமநோயென அறிந்து,

"படர்கொடி பருவம் அணையில், நட்ட
இடமது துறந்து நல்லின்ப மெய்த
அருகுள தருவை யவாவும்." ஆதலின்,

மனோன்மணியை யவளுக்குத் தக்க நாயகனாகிய புருஷோத்தமவர்மனுக்கு விவாகஞ்செய்து கொடுக்கும்படிக்கும், அதன் பொருட்டுத் திருவநந்தபுரத்திற்கு நடேசனைத் தூதனுப்பும்படிக்கும் ஜீவகனுக்குச் சொல்லிப்போயினர்.

அடுத்த களம் குடிலன் மனையில். குடிலன், புத்தியின் சக்தியைப்பற்றியும், தன்கோரிக்கைகளின் நிறைவேற்றத்தைப் பற்றியும், அரசன் 'பிடித்தாற்கற்றை விடுத்தாற்கூளம்' எனத் தன் கைவசத்தி லிருப்பதைப் பற்றியும், தானேயிராச்சியத்தை முழுதும் கைக்கொள்வதற்கு 'கரு

† பாலைவனம். * மரம்
1, நீராடல்; அலங்கரித்தல். 2, தலைமயிர். 3, வீணை. 4, சோலை. 5, ஆபரணம்,

வியும் காலமும் அறியில் அரியதில்லையாதலின், காமநோய்கொண்ட மனோன்மணியைத் தன் மகன்பலதேவனுக்கு மணம் புரிவித்தலே தக்க தென்றும், யோசித்துக் கொண்டிருக்கும் பொழுது,

"ஜய ! ஜய ! விஜயீபவ !" என்று சொல்லிக் கொண்டே சேவகன் வேந்தனது திருமுகத்தைக்கொணர்ந்து கொடுத்தான். குடிலன் திருமுகமூலமாய் மனோன்மணியின் மணத்தை யறிந்து அதுநடக்கின், "அரசர்க்கு ஆயுள் அற்பம்" ஆயினும், அரசு தன் கைக்குள்வர "காலதாமசம் சாலவுமாகும்" என்று யோசித்து, எவ்விதமாவது சூரனாகிய சேரனுக்கும் பாண்டியனுக்கும் போர்மூட்டுவித்து, விவாகத்தைத் தடுத்துப் பாண்டியனைப் போர்க்களத்தில் இறக்கச் செய்யல்வேண்டுமென்று தீர்மானித்தான். அங்ஙனம் செய்வது பாவமென்று முறையிடும் தன் மன சாக்ஷியைக் குடிலன் தட்டியடக்கும் விதம், அவன் குணத்தைத் தெளிவாய் விளக்குகின்றது:—

"தோடம் !—சுடு ! சுடு !
தீதுநன்றென ஓதுவ வெல்லாம்
அறியார்க்கு அறையும்* வெறுமொழியல்வோ?
பாச்சி பாச்சி யென்று அழும் பாலர்க்குப்
பூச்சி பூச்சி யென்பது போலாம்.
மன்னரை உலகம் வணங்கவும் பார்ப்பார்க்கு
அன்னங் கிடைக்கவும், அங்ஙனம் அறைந்து
மதியிலாரை மயக்குவர் வஞ்சமாய்.
அதினல் நமக்கென்? அப்படி நினைக்கில்,
இதுவரை யித்தனை நன்மை யெப்படி வரும்?"

தான் மிகவுஞ் சந்தோஷத்தை யடைந்ததாகப் பாசாங்குபண்ணிச் சேவகனுக்கு ஓர் மாலையளித்து, மன்னன் சபைக்கு விடியுமுன் வருவதாகச் சொல்லியனுப்பச், சேவகன் அவன் உதாரத்தைப் புகழ்ந்து வாழ்த்திவிட்டுச் சென்றான்.

பின்வரும்தனிமொழி குடிலனுக்கே தக்கது. தம்மைக்கொண்டே பிறரையும் மதித்தல் மனிதர்களுக்குச் சுபாவம். துர்க்குணிகள் பிறர் நற்குணத்தை நம்புதல் அரிது. காமநோயால் வருந்தும் இராவணன் சந்திரனைநோக்கி "நீயுங் கண்டார் சொல்லக் கேட்டாயோ?" வென்று வினவுதலும், "காதலியைக் காரிருளிற் கானகத்தே கைவிட்டு"த் துயருழன்ற நளன் சமுத்திரத்தை நோக்கி "மாதை, இரவகற்றி வந்தாய் கொல்" என்று வினவுதலும், தன் மனத்தாற் பிறர்மனத்தை யளக்கும் இயற்கை பற்றியே. ஆதலின் தன்னயமே கருதும் குடிலனைப் பிறர் நன்மையைவிரும்புவோர் உளர்என நம்பச்சொல்வது, குருடனை வேந்தனைப்போல் விழியென்று வேண்டிக்கொள்ளுதல் போலாம். குடிலன் அறிந்தது இதுவே:—

"தருமம் தானம் என்று உலகு அறியும்
கருமம் அனைத்தும் செய்பவன் கருத்தைக்
காணின் நாணமாம்; அவரவர் தமக்கா
எண்ணிய எண்ணம் எய்துவான்$ பலவும்
பண்ணுவர் புண்ணியம் போல. எல்லாம்
தன்னயங்கருதி யன்றித், தமைப்போற்
பின்னொருவனை யெணிப் பேணுவர் உளரோ?
புண்ணியம் ஜீவகாருண்ணியம் எனப்பல
பிதற்றுதல் முற்றும் பித்தே. அலதேல்,
யாத்திரைபோன நூற்றுவர், சோறுஅடு*
பாத்திரந் தன்னிற் பங்குபங்காக
ஒருவரை யொருவர் ஒளித்துப் பருமணல்
இட்டகதையாயிருக்குமோ?"

## பஞ்சமும் அதனால்வரும் சஞ்சலமும்.

இவ்விந்து தேசத்தில் நடந்துவரும் காரியாதிகளை அப்போதப்போதே எழுதி வைக்கும் ஏற்பாடு உண்டாவதற்கு வெகு காலத்துக்கு முன்னமே பஞ்சமானது நமக்கு வெகு நஷ்டம் உண்டாக்கிக் கொண்டு வந்திருக்கிறது. இத்தேசத்தின் பூர்வசரித்திரத்தை இத்தேசத்தார் எழுதிவைத்து பத்திரப்படுத்தா திருந்தபோதிலும் அப்போதப்போது இத்தேசத்துக்கு வந்துபோன அயல்தேசத்தார் இங்கு கவனித்த காரியாதிகளை எழுதி வைத்திருக்கின்றார்கள். அதனால் கி. பி 942, 1345, 1631, 1770, 1837, 1866 இவ்வருஷங்களில் நமது தேசத்தில் கொடிய பஞ்ச முண்டாயிருந்ததாகத் தெரியவருகின்றது. இப்படி யடிக்கடி யுண்டாகும் பஞ்சத்தினால் விளையும் கேடுகளென்னவெனில் (1) அக்காலத்திலுள்ள ஜனங்கள் சாப்பாட்டுக்கு வகையின்றி மெலிந்து அலைந்து இறந்து

* சொல்லும்.

$ அடையும் பொருட்டு.
* சமைக்கும்.

பேரவது ஒன்று; (2) அத்தேசத்தின் செல்வம் மிகக் குறைந்து, பின்சந்ததியாரும் அண்டை அயல் தேசத்தவரும் அவஸ்தைப் படும்படியா வது ஒன்று.

இப்படியுண்டாகும் கேடுகளை நன்முய் கவனிக்க வேண்டியது ஆவசியகம். பஞ்சத்தால் உண்டாகும் சம்பவங்களை நினைக்கும்போது நமக்குத்திகிலுண்டாகிறது. நமது தேசத்துக்கு மேற்கே ஆப்ரிக்கா கண்டமென்று ஒரு பெரிய தேசமிருக்கிறது. அதின் ஓர்பாகமாகிய எகிப்து தேசத்தில் எண்ணூறு வருஷங்களுக்கு முன் உண்டான பஞ்சத்தில் ஒருவர் கவனித்ததைக் கேளுங்கள்: "ஆடுமாடு முதலிய சகல மிருகங்களும் தீனியில்லாமல் தாமா யிறந்துபோயின. அவைகளை மனிதர்தின்று பிழைத்தார்கள். நாய்கள், பூனைகள் முதலிய அருவருக்கத்தக்க ஜந்துக்களையும் அதிக விலைக்கு வாங்கித் தின்றூர்கள். அப்பால் அவைகளும் அகப்படவில்லை. ஆதலால் அதிகமாய் ஜனங்கள் மடிந்துபோனூர்கள்."

இதுவுமன்றி கி. பி. 1200-ம் வருஷத்தில் அந்ததேசத்திலேயே வெகு கொடூரமான பஞ்சம் சம்பவித்தது. அப்போதுண்டான துன்பத்தைப் பார்த்தறிந்த அப்துல்லத்தீப் என்பவர் எழுதியிருப்பது இங்கே கவனிக்கத்தக்கது:— "மஹா கொடூரமான பஞ்ச முண்டானகாலத்தில் மனிதருக்கு உணவு எங்குங் கிடையாமல் கடைசியாய் மலத்தைப் புசித்தார்கள். அப்பால் சிலமனிதர் இறந்துபோனவுடன் மற்றவர்கள் அப்பிரேதங்களைப் பகிர்ந்து வெகு ஆவலுடன் புசித்துப் பசியாறினூர்கள். அதை இராஜாங்கத்தார் கவனித்து, நரமாம்ச பட்சணிகளை உயிருடன் காஷ்டமேற்றி தகனஞ்செய்ய உத்தரவுசெய்தார்கள். அப்படிச் சிலர் வதை செய்யப்பட்டபோது, அதைப் பார்த்திருந்த மனிதர் காஷ்டத்தின்மேல் வெந்தும் வேகாததுமாயிருந்த பிணங்களைப்பிடுங்கிப் பொரித்த ஆட்டிறைச்சியை யுண்பதுபோல் உண்டு பசியாறினூர்கள்."

இதெல்லாம் அயல்தேசத்தில் நடந்த காரியங்கள். நமது தேசத்தில் கி. பி. 1345-ம் வருஷப் பஞ்சத்தில் உண்டான சஞ்சலத்தைப் பற்றி ஒருவர் எழுதி வைத்திருப்பதைப் பாருங்கள்: "பஞ்சமோ வெகுதூரம் பரவியிருந்தது. காரியாதிகளைக் கவனித்தால் வெகு மோசம் சம்பவிக்கிறதா யிருந்தது. நான் ஒருநாள் வெளியே உலாவப் போயிருக்கும்போது மூன்று ஸ்திரிகள் அநேகநாட்களுக்கு முன் இறந்து அழுகிப்போய்க்கிடந்த ஒரு குதிரையின் தோலைத் துண்டுதுண்டாய்த் துணித்துப் புசித்துக் கொண்டிருந்ததைப் பார்த்தேன்". இது இப்படியாக, 1631-ம் வருஷத்திலுண்டான பஞ்சம் இதைவிடப் பயங்கரமானதா யிருந்ததாம். "இறந்துபோனவர்களின் தொகையைக் கணக்கிட முடியாது. இறந்துகிடக்கும் பிணங்களை எடுத்து அடக்கம்பண்ண ஒருவரையும் காணவில்லை. சாதாரணகாலத்தில் தானியம் விளைந்து தலை சாய்ந்திருக்கும் இடங்களிலெல்லாம் மனிதரின் மண்டையோடுகளும் விலாவெலும்புகளும் நிறைந்திருந்தன. மனிதர் ஒருவரையொருவர் கொன்று தின்றூர்கள். பசியின் தாபத்தைச் சகிக்காமல் பெற்றோர்கள் தங்கள்பிள்ளைகளையே பட்சித்தார்கள். வியாபாரிகள் எலும்புகளைப் பொடியாக்கி கோதுமைமாவுடன் கலந்து ரொட்டிசெய்து அதை வெகு விலையுயர்ந்த தின் பண்டமாய்ப் பணக்காரருக்கு விற்றுவந்தார்கள். பிரேதங்களை வெயிலிற் காய்வைத்து அப்பால் தண்ணீரில் நனைத்துத் தின்றூர்கள்". இதென்னவிபரீதம்! அம்மம்ம!! இந்தக்கொடூரமான காட்சியைக் கண்டவர் எப்படிச்சகித்தனரோ? மேலும், இப்படியெல்லாம் சம்பவிக்க வேண்டுமென்றால் காலம் எவ்வளவு சுபிக்ஷக்குறைவா யிருந்திருக்க வேண்டும்!!

பதினேழாம் நூற்றூண்டின் பஞ்சத்தின் வரலாறு இது. அதற்குப்பிறகு 1837-ம் வருஷத்திலுண்டான பஞ்சத்தில் ஆக்ராவென்னும் சிறு பட்டணத்தில் ஒவ்வொருநாளும் போலீஸாரால் அடக்கம் பண்ணப் பட்ட பிணங்களின் தொகைமட்டும் 400 ஆயிற்றும். சுற்றத்தார் எடுத்து அடக்கம் பண்ணின பிணங்கள் எத்தனையோ! அப்போதுள்ள ஜனத் தொகையில் நாலிலொரு பாகத்தோர் மடிந்து போனதாக கணக்கிடப்பட்டிருக்கிறது. யமுனைநதிக் கரையிலும் ஊருக்குள்ளும் மாண்டுகிடக்கும் மனிதரின் பிரேதங்களை யெடுத்து அடக்கம்பண்ண

ஒருவரு மில்லாததால் 'டைரெக்டர்' களின் உத்திரவுப் பிரகாரம் சில வேலையாட்கள் அப் பிணங்களை ஒருபடகில் ஏற்றி அக்கரைக்குக் கொண்டுபோய் எறிந்துவிட்டு வந்தார்களாம் 1866-ம் வருஷத்தில் பஞ்சமுண்டானபோது ஜனங்கள் பட்டபாட்டை நடுக்கடலில் துறை தெரியாமல் தத்தளிக்கும் கப்பலில் உணவில் லாமற்போனால், அக்கப்பலிலுள்ள மனிதர் எ ன்ன பாடுபடுவார்களோ அதைவிட அதிகப் பாடு பட்டார்களெனச் சொல்லலாம்.

அகவிலை கறுப்புக்காலத்தில் மிக அதிகப்பட் டிருந்தது. 1770-ம்வருஷத்தில் பற்பலதானியங் கள் விற்கப்பட்ட விலைகளைக் கவனிப்போம்.

| சாதாரணகாலத்தில் | கறுப்புக்காலத்தில் |
|---|---|
| முதல்தரம் அரிசி ரூ 1-க்கு 28 சேர் | $3\frac{1}{3}$ சேர் |
| முரட்டரிசி ரூ 1-க்கு 40 சேர் | $3\frac{1}{4}$ சேர் |
| சோளம், வரகு முதலிய இழிந்த தானியங்கள் ரூ 1-க்கு 45 சேர் | $4\frac{1}{2}$ சேர் |
| கோதுமை ரூ 1-க்கு 26 சேர் | $4\frac{1}{4}$ சேர் |
| பருப்பு ரூ 1-க்கு 30 சேர் | 4 சேர் |

இப்படியிருந்தால் ஏழைக்குடிகள் எப்படி ஜீவி ப்பார்கள்! 1860 - 61-ம் வருஷங்களில் வட மேற்கு மாகாணங்களிலுண்டான பஞ்சம் பர வியிருந்த இடங்களின் விஸ்தீரணம் இருபதினா யிரம் சதுரமயில். அப்போது உணவுக்கு வழி யின்றி அவஸ்தைப்பட்ட ஜனங்களின்தொகை ஒருகோடியே முப்பதுலக்ஷம். பஞ்சத்தி லிறந் துபோனவர்களின் தொகை ஐம்பது லக்ஷம். உணவுக்கு யாதொன்று மகப்படாமல் பசியால் பாதிக்கப்பட்ட ஜனங்கள் காடுகளிற்போய், கா ட்டுப்பழங்கள், கிழங்குகள், கீரைவகைகள், பு ல் பூண்டு முதலியவைகளைத் தின்று வயிற்றை நிரப்பினார்கள். இதனால் அநேகருக்கு அஜீ ரணமுதலிய பலவித நோய்களு முண்டாக இதன் மூலமாயும் அநேகர் மாண்டார்கள். சிலர் இராஜாங்கத்தாரால் ஸ்தாபிக்கப்பட்ட கஞ்சித்தொட்டிகளுக்குப்போய் கால்வயிற்றுக் கஞ்சி குடித்து, குழந்தைகளுக்குப் போது மான பாலில்லாமல் அநேக குழந்தைகள் சா கவும், அதற்கப்பால் சில்நாட்களில், வரவர மெலிந்துகொண்டே யிருந்த சுற்றத்தாரில் அ நேகர் மாண்டுபோகவும், இவைகளைக் கண்டு ஆற்றாமையாலும் தங்கள் ஊரிலுள்ள அநேகர் நாநாதிசைகளில் சிதறிப்போகப் பட்டணமே பாழாய்விட்டதினாலும், "இனி நாம்மட்டும் ஜீ வித்திருந்து என்னபலன்?" எனப் பலர் நினை த்துத் தங்களுயிரை மாய்த்துக்கொண்ட பரிதா பத்தைக் கண்டவர்கள், மனந்தளாமல் விச னத்தோடெழுதியதை வாசித்துமிருக்கிறோம். அயலிடங்களுக்கு பிழைப்புக்காகப் போன ப லர் அங்குமிங்குமோடித் திரிந்து எங்கும் உண வகப்படாததால் காலோய்ந்து மெய்தளர்ந்து பசியால்வாடி சூரியவெப்பம் சகிக்கமாட்டாத வர்களாய்மரத்தடிகளில்விழுந்துகிடக்கச்,சற்று நல்ல நிலைமையிலிருக்கு மவ்வூரார் தங்களைப் பார்த்து ஐயோவென மனமிரங்கி யேதாவது உணவுகொடுத்து உதவமாட்டார்களா? என்ற எண்ணத்துடன் அடிக்கடி கண்ணை விழித்து விழித்துப் பார்த்துக்கொண்டே யிருந்து, இரா க்காலத்தில் போர்த்துக்கொள்ளத் துணியில் லாததால், பனிவாடையில் மிக நடுக்கத்துடன் வருந்திக் கிடக்கும் சமயங்களில் போலீசாரால் கஞ்சித்தொட்டிகளுக்குக் கொண்டுபோகப்பட் டு அங்கேயு மாண்டார்கள்.

வங்காளத்தில் 1874-ம் வருஷத்தில் பஞ்ச முண்டானதைப்பற்றி ஒருவர் எழுதியதைக் கேளுங்கள்:"பஞ்சம்அதிகப்பட்டபோதுஏழை ஜனங்களின் பிழைப்புக்காக அநேக புதுரஸ் தாக்கள் போடும்படி இராஜாங்கத்தார் உத்தி ரவுசெய்தார்கள். அப்படி வேலை நடந்துகொண் டிருக்கையில் கூலியாட்களுக்கு சம்பளங்கொ டுக்கும் உத்தியோகஸ்தரும் ஒருதுரையும் குதி ரையேறி வேலைநடந்து கொண்டிருந்த இடத் துக்கு வந்தார்கள். அப்போது கூலியாட்கள் எல்லாரும் அவர்களிருவரையும் சூழ்ந்துநெருங் கிவந்து கைகளைத்தூக்கிக் கும்பிட்டு, தங்களுக் குக் கூலிகொடுக்கும்படியாய்க் கெஞ்சிக்கூத்தா டினார்கள். சிலர் ஒன்றும் பேசாமல் விசனத்து டன் அழுதுகொண்டு நின்றார்கள். சிலர் தங் களைக் குதிரைகள் உதைத்து மிதித்து விடு

மென்கிறபயம்தோன்றாமல்கிட்டநெருங்கிவந்து கூலிகேட்டார்கள், அவர்கள் போட்டசத்தம் வரவர அதிகப்பட்டுப் பெருங்கூச்சலாயிற்று. சிலர் பைத்தியம் பிடித்தவர்போல் கூப்பாடு போட்டார்கள். சற்று நேரத்தில் எல்லாக்கூலியாட்களும் அதிகமாய் நெருங்கிவந்து பசிபொறுக்க ஏலாது என்று கதறினார்கள். உடனே அங்குவந்திருந்த துரையானவர் குதிரையை விட்டிறங்கிக் கூலிக்காரருக்குள்ள சம்பளத்தைக்கொடுத்து விடும்படி சொன்னார். ஒருவர் இருவருக்குச்சம்பளங்கொடுக்குமுன்னமே உனக்கு எனக்கென்று சண்டையும், சச்சரவுமுண்டாயிற்று. அப்போது சேவகர்கள்தடிக்கம்புகளால் ஓங்கியடித்தும் கூட்டங்கலையவில்லை. எல்லாரும் ஒரேமட்டாய் நெருங்கிவந்து சேவகர்களை அப்பால் தள்ளிவிட்டு பணப்பையைப்பிடித்து இழுத்து அதிலிருந்த பணத்தைச் சின்னபின்னமாய்ச்சிதறிவிட்டார்கள். அப்பால் பிணத்தைப் பிடுங்கித்தின்னுங் கழுகுகளின் கால் நகங்களைப் போன்றகைகளால் ஒவ்வொருவரும்தங்களுக்கு அகப்பட்ட மட்டிலும் பணத்தையள்ளிக்கொண்டு நாலா பக்கங்களிலும் ஓடிப்போனார்கள். சிலர் தானியாதிகளைக் கொள்ளையிட்டார்கள்."

கருப்புக்காலங்களில் இராஜாங்கத்தாருக்குண்டாகும் தீர்வை நஷ்டமிவ்வளவென்று மதிப்பிடச் சிலஉதாரணங்கள் காட்டுவோம். 1846ம் வருஷத்துக்கு முன ஆக்ரா பிரிவிலிருந்து வருஷாவருஷம் வசூலாகும் தீர்வை 1 - கோடி ரூபாய். பஞ்சமுண்டானதற்குப்பின் 5-வருஷத்துக்குச் சராசரி 80 லக்ஷம் ரூபாயாகிவிட்டது. ஆகவே வருஷாவருஷம் 20 லக்ஷம் ரூபாய் நஷ்டமாயிருக்கின்றது. தீர்வை நஷ்டம் 20 லக்ஷம் ரூபாயானால், குடிகளுக்கு மாமூல் நஷ்டம் அதற்கு 10 மடங்கு அதிகமாகும்; அதாவது 8 கோடி ரூபாய்.

கால்நடைகள் மாண்டுபோவதால் குடிகளுக்குண்டான நஷ்டமோ மிகப்பெரிது. கவலையடிப்பதற்கு உபயோகப்படும் காளைகளும், உழவுகாளைகளுமில்லாவிட்டால் குடிகள் எப்படிப்பிழைப்பார்கள்? பஞ்சகாலங்களில் கிராமத்திலுள்ள கால்நடைகளில் சரிபாதி மாண்டுபோகின்றன, கால்நடைகளில்லாவிட்டால் வயல்களுக்கு உரமெங்கே? வயல்கள் உழுவதெங்கே? மரமடிப்பதெங்கே? வண்டியோட்டுவதெங்கே? மற்றவேலைகள் நடப்பதெங்கே? உழவன் வீட்டில் ஓர் குழந்தையிறந்து போனாலுங்கூட அவ்வளவு வருத்தமிராதென்றே நினைக்கவேண்டும். மாடுகள் மடிந்துபோனால் பெருத்தகஷ்டம். கால் நடைகளில்லாத காரணத்தால் சில வருஷங்களுக்குமுன் சேலம்ஜில்லாவில் பஞ்சமுண்டான காலத்தில் 3 லக்ஷம் ஏக்கர் வரையில் பயிரிடப்படாமல் தரிசு போடப்பட்டது. வட ஆர்க்காடு ஜில்லாவில் சற்று ஏறக்குறைய 2 லக்ஷம் ஏக்கர் வரையில் தரிசுபோடப்பட்டது.

இதன்றி ஏழைஜனங்களுக்கு பிழைப்புக்கு வழியொன்று மில்லாமல் அங்கங்கே சிற்சில வியாபாரிகளும் பாரிக்குடிகளும் சேர்த்துவைத்திருக்கும் தானியத்தைக் கொள்ளைகொண்டாவது ஜீவனைக்காப்பாற்ற எண்ணி அப்படியே செய்கிறார்கள் கும்பகோணத்தில் சென்றவருஷமிப்படி கொள்ளையுண்டாயிற்று. நாய்க்குப் பசியுண்டானால் கதவுதிறந்திருக்கும் வீடுகளில் நுழைந்து சோற்றைத்திருடித்தின்னும். மனிதருக்குப் பசிதாக முண்டானால் தந்திரத்தோடு கன்னமிட்டாவது சாப்பாட்டை சம்பாதிப்பார்கள். கொலை, களவு, கூட்டக்கொள்ளை முதலிய கொடிய செய்கைகளும் அதிகமாகின்றன.

சில வகுப்பார் இப்படிச் செய்வர, முன் சற்றுநல்ல நிலைமையிலிருந்த சிலர் சேவகம் செய்து நாட்கழிப்பது இழிவென்றெண்ணி விவசாயம் செய்துவந்தவர்களாதலால், தாங்கள் எவ்வளவாய்க் கேவலப்பட்டிருந்த போதிலும், மற்றோரிடத்திற் போய்ப்பிச்சை கேட்பதும் சர்க்காரில் வைத்திருக்கும் கஞ்சித்தொட்டிகளுக்குப் போவதும் தங்கள்பூர்வஸ்திதிக்குச்சற்றும் தகாதென்றெண்ணித், தங்களிடத்திலுள்ள மட்டும் சாப்பிட்டு அப்பால் தங்கள் கௌரவம் கெடாமல் இறந்துபோவதே நலமென நினைத்துக் கெட்டுப்போகிறார்கள். தாங்கள் சாவதன்றி ஒன்றுமறியாத தங்கள் பிள்ளைகளையும் பெண்களையும் அவ்வாறே சாகவிடுகின்றார்கள். சில ஜாதியாரின் ஸ்திரீகள் வெளியே வந்தறியாதவர்களாதலால், எவ்வளவு பசியால் வருந்திய போதிலும் தங்கள் ஜாதிக்கட்டிலுள்ள அபிமா

னத்தால் கஞ்சித்தொட்டிகளுக்கு வராமல் செத்துப்போகிறார்கள்.

பஞ்சகாலத்தில் வியாபாரம் வெகுவாய்மட்டுப்படும். 1868-ம் வருஷத்தில் இராஜபுத்தானவில்பஞ்சமுண்டான காலத்தில் இராஜாங்கத்தாருக்கு உப்புத்தீர்வையினால் வரும் வரும்படியில் 4 லக்ஷத்து 50 ஆயிரம் ரூபாய் நஷ்டமுண்டாயிற்று. எப்போதும் பொதிமாடுகளின் மேல் உப்புச்சுமையேற்றி இராஜபுத்தானவிலிருந்து ஜப்பல்பூர் முதலிய இடங்களுக்கு சாகர் என்னும் பட்டணத்தின் வழியாய்க் கொண்டுபோவார்கள். வழக்கமாய்ச் செலவாகும் அளவைவிட அந்த வருஷத்தில் இலக்ஷம் மணங்கு உப்புகுறைவாய்ச் செலவாயிற்று.

காலசுபிக்ஷக்குறைவால் இப்படி யெல்லாம் சம்பவிக்கிறது. அடுத்த வருஷத்தில் நல்லமழை பெய்தபோதிலும் கிருஷிசரியானபடி நடப்பதற்கு ஏதுவில்லாமல் அவ்வருஷமும் பஞ்சமுண்டாகின்றது.எப்படியெனில், குடிகளின்கால் நடைகளில் அநேகம் மாண்டுபோயின. மிகுந் திருந்தவைகளையும் சாப்பாட்டுக்கு வேறுவகையின்றி விற்றுப்போடுவார்கள். விதைக்காக வைத்திருக்கும் தானியத்தையும் எடுத்து சாப்பிட்டுவிடுவார்கள். கையிலிருந்த திரவியத்தைக்கொண்டு அதிக விலைக்கு அப்போது கிடைக்கும் தானியத்தை வாங்குவார்கள். ஆகவே மழைபெய்து செழிப்படையும் போதும், ஏரிகுளங்களில் தண்ணீர் நிறைந்தபோதும், ஏர் உழுவதற்கு மாடுகளில்லாமலும், விதைப்பதற்கு தானியமில்லாமலும் மாடுகள், விதை, உழவேத்தனங்கள், உரம் முதலியவைகளை விலைக்கு வாங்கத்தகுந்த திரவியமில்லாமலும் நிலத்தைப் பயிரிட முடியாமல் தரிசுபோட நேரிடுகின்றது. இவ்வித அசந்தர்ப்பம் பஞ்சங் கழிந்து அநேகவருஷங்களுக்கு நீடித்திருக்கும். "மழைவிட்டும் தூவானம்விடவில்லை" என்பதுபோல், பஞ்சந் தீர்ந்தும் சஞ்சலம் தீராமலிருப்பதால், அப்பஞ்சத்தால் வரும் கெடுதி கொஞ்சமல்ல.

ஆகையால் அடிக்கடி பஞ்சமுண்டாகாமல் நாம் தடுக்கமுடியுமா? என்ன செய்தால் முடியும்?

J. D. R.

## 18-ம் நூற்றாண்டின் தமிழ்ப் பாஷாபிவிர்த்தி.

தமிழ்ப்பாஷையானது சென்னைப்பட்டினத்திற்கு வடக்கே யிருபது மைல் தூரத்திலுள்ள பழவேற்காடு முதல், தெற்கே கன்னியாகுமரி வரைக்கு முள்ள நாடுகளிற் பேசப்பட்டு வருகிறது. இலங்கைத் தீவிலும், ஏறக்குறைய மூன்றிலொருபங்கு ஜனங்களாற் பேசப்படுகிறது. தமிழ்ப்பேசும் ஜனங்களின் தொகை (சென்ற வருஷத்து ஜன கணிதக் கணக்கின்படி) ஏறக்குறைய 170 லட்சமாகிறது. இவ்வளவு ஜனங்களாற் பேசப்பட்டுவரும் நம் தமிழ்ப் பாஷையானது ஆரியர் மகம்மதியர்கள் மூலமாய்ப் பொறுக்க முடியாத துன்பமடைந்து தன்னுரு மாறி நிற்கின்றது. இந்தத் தமிழ்ப்பாஷையினுடைய, 18-ம் நூற்றாண்டின்கணிருந்த, நிலையையும், அபிவிர்த்தியையும் பற்றிச் சொல்லல் வேண்டியது நாமெடுத்துக்கொண்ட விஷயம்.

திருநெல்வேலி ஜில்லாவிலிருந்த (Bishop Caldwell) பிஷப் கால்ட்வெல் துரையவர்கள் "சென்ற 200 வருஷமாகத் திராவிட பாஷையானது அபிவிர்த்தியற்றுக் கிடக்கின்றதெனக் காணப்படுகின்றது" என்றெழுதுகிறார், அது ஏகதேசமுண்மையே யென்பதற்கு ஆக்ஷேபனையில்லை. இப்படி யபிவிர்த்தியற்றுக் கிடப்பதற்குக் காரணமென்னவென்று சற்று விசாரித்துப் பார்ப்போமானால் எளிதில் விளங்கலாம். நம்சுதேசபண்டிதர்கள் இதற்குக் காரணம் அங்கிலேய அரசாட்சியே யென்பார்கள். இப்படி இவர்கள் சொல்வது தன்னைப்பெற்ற தாயாரை மலடியென்றாற்போ லுமிருக்கிறது. இவ்வாறு தமிழ் அபிவிர்த்தி யில்லாதிருக்குங் குற்றம் நம்மைச் சார்ந்ததே யொழிய அரசாட்சியாரைச் சார்ந்ததேயல்ல வென்பது எல்லார்க்குந் தெரிந்த விஷயம். ஆகையால் நமக்கு நம்முடைய தமிழ்ப்பாஷையானது அபிவிர்த்தியடைந்து அங்கிலேயம் போலத் தழைத்தோங்கல் வேண்டுமென்ற எண்ண மிருக்குமானால், நாமெல்லா மொருங்கு சேர்ந்து "விவேக சிந்தாமணி" "மகாராணி" முதலிய மாதாந்தரத் தமிழ்ப்பத்திரிகைகளை நடத்துங் கூவான்களுடைய நன்முயற்சிகளுக்கு உதவிசெய்தல் வேண்டும்.

இது நிடக்க.—எடுத்துக்கொண்ட விஷயத்தைப்பற்றிச் சொல்லல்வேண்டியவற்றைக்கூறுவோம். சென்ற 18-ம் நூற்றாண்டின்கண் எழுதியிருக்கற்பட்ட பிரபந்தங்களெல்லாம் விசேஷமாகச் சைவம், வைணவ முதலிய மதசம்பந்தமான நூல்களேயாம். ஆகையினாலே, அந்தப் பிரபந்தங்களெல்லாம் மதவைராக்கிய மென்னும் பேய்பிடித்து அந்நூலாசிரியர்களை யலைக்க, அவர்கள் அதின் கைவசப்பட்டு, அக்கடவுளேபெரியவர், இக்கடவுளேபெரியவர் என்று வீண்வாதம் பேசிப் பொய்யையும் புரட்டையும்பற்றி விவரிக்கும் நூல்களாய் முடிந்தன. இவ்விதமான பிரபந்தங்களெல்லா முண்டாவதற்குக் காரணமென்னவென்றால், யாராவது ஒருவர் ஒரு மதத்தைப்பற்றிப் பிரசங்கஞ்செய்தால், அதைக் கேட்டுக்கொண்டிருந்த மற்றொருவர், பிரசங்கியார் கூறிய நியாயங்களையு முண்மைகளையு மனுவளவேனும் யோசியாமல், நங்கடவுட்கு விரோதமாக வெழுந்து இவன் பிரசங்கஞ் செய்யவாவது என்று கோபங்கொண்டு அவர்க்குமாறாக நியாயவாயிலாகப் போகாமல், என்சுவாமி யிப்படிச்செய்தாலுன் சுவாமியுமிப்படிச் செய்தாரே யென்று புஸ்தகங்களிலெழுதிக்கொண்டுங் கவிகள் பாடிக்கொண்டு முலாவுவர். ஆதியிலிருந்த தமிழர்கள் மிகுந்த ஊக்கமுள்ளவர்களாயு மெளிதில் விஷயங்களி னுண்மையை யுணரக்கூடிய சக்தியுள்ளவர்களாயுமிருந்தார்கள். ஆகையினாலே தான் ஆரியர்களுடைய மதக்கொள்கைகளை யவர்களெளிதிற் பற்றிக்கொண்டார்கள். தமிழர்களுமாரியர்களு மதிகமாய்ஊடாடல் வேண்டிநேரிட்டதினால் இருவர் குணங்களு மொரே யாதிரியா யேற்பட்டுவிட்டன. யாம் பிடித்ததையே சாதிப்பே மென்னுஞ் செருக்கும், எவ்வளவு நியாயமாய்க் கூறினு முண்மை யுணராமையும், உணர்ந்தாலும் அதற்கேற்க நடவாமையுமாகிய துர்க்குணங்கள் காலக்கிரமத்தில் உற்பத்தியாய் விட்டன. ஆகையினாலே தான் மதவாதம் விசேஷமாய் அதிகரித்தது. இம்மூன்று துர்க்குணங்களையு மறவொழித்தா லன்றி நந்தமிழ்நாடு முன்னுக்கு வரல்மாட்டாது.

மேலே சொல்லிய மதச்சார்பானவை யொழிந்த நூல்களிற் பெரும்பான்மை, யகமமுந்திரிபுமா யெழுதற்பட்ட அந்தாதிகளும், கலம்பகங்களும், மடக்குகள் நிரம்பிய சிலேடை வெண்பாக்களும், நாகபந்தம், கமலபந்தம், முரசபந்தம் முதலியன நிறைந்த சித்திரக்கவி மஞ்சரிகளும், மைந்தர் விளையாட்டுப் புராணங்களுமாயிருக்கின்றது. மேற்கூறிய வற்றுட் புராணமாவது என்னவென்றால்,பூர்வீக ஆசிரியர்களாகிய திருத்தக்கதேவர், கல்லாடர், கம்பர் முதலிய வித்வ சிரோன்மணிகள் கூறிய கற்பனைகளைத் தவிர்த்துச், சுதந்தர யூகத்தாலமைந்த கற்பனைகளும், அலங்காரங்களும், அர்த்த புஷ்டியுங் கிஞ்சித்தேனு மில்லாமல், கடவுளைப் பற்றித் தமக்குத் தோன்றியவாறு லீலை செய்ததாகச் சிறுபிள்ளைத்தனமா யெழுதப்பட் டிருக்குமோர்வித நூலாம். இதுநிற்க, சிலர் கலம்பகம் அந்தாதி முதலியன, பெரிய காவியங்க ளெழுதுவதற்காக ஏற்பட்ட அப்பியாசப் பிரபந்தங்களாம், ஆகையால் அவற்றிலே எழுதி எழுதியதிகப் பழக்க மிருந்தாலொழிய, வேறு பெரிய நூல்கள் செய்தல் முடியாதென்று கூறிமயங்குவார்கள். கலம்பக மென்பது சாமானியமான பிரபந்த மன்று. கவிசெய்யுந் திறமையில் மிகவும் பேர் பெற்றவர்களே கலம்பக மெழுதத்தக்கவர்கள். பாடிப்பாடித் தேர்ந்தவர்களே கலம்பகமெழுதப்புகுவார். அதெப்படி யென்றால், சாதாரணமாயுள்ள விருத்தங்களைத் தமிழிற் கிஞ்சித்து அப்பியாச முள்ளவர்களு மெழுதலாம்; இப்பேர்ப்பட்டவர்கள், மடக்குந் திரிபுக் துறைகளு மமைந்த கவிகள் செய்தல் முடியாது. ஆகையாலிவற்றையப்பியாசப் பிரபந்தங்களென்று கொள்ளுதல் கேவலம் அசங்கதமாம். இவ்விதமாகக் கலம்பக முதலியன எழுதுவதில் வீணே காலத்தைச் செலவிடுதலைப் பார்க்க, வசநங்களாலேனும், எளிதாய்ப்பாடக்கூடியதுந் தாற்பரியங்களை நன்றாய் வெளியிடக் கூடியதுமான கவிகளினாலேனும், சத்விஷயங்களைப்பற்றி யெழுதுதல் அதிக நன்மையை யுண்டாக்குமென்று தற்காலத்துள்ள பெரியோர்கள் சொல்லுகிறபடி யாவரும் நடத்தல் வேண்டியது நிரம்ப ஆவசியகமான காரியம்.

சற்குண சாஸ்திரம் (Ethics), அங்கஜீவ சாஸ்திரம் (Physiology)மநோதத்துவ சாஸ்திரம் (Psychology) ஆகிய இவற்றின் சம்பந்தமாக

ஒருவிதப் பிரபந்தமுங் கிடைப்பது முற்றிலும் அசாத்தியமாய்ப் போய்விட்டது. பிறகு அந் நூற்றாண்டின்கண் ணுற்பத்தி யானவற்றுள் எவைதான் பிரயோசநமுள்ள நூல்களென்று விசாரிப்போம். அவைகளெல்லாம் பிராயிகம் தற்காலத்து சாஸ்திர ரீதியாக அமைந்த இலக்கண சம்பந்தமாகவும், ஏகதேசம் நீதி, சற்குணமாகிய இவற்றினை விளக்கும் பொருட் டுற்பத்தியானவைகளாகவு மிருப்பனவாம். இலக்கண சம்பந்தமா யிருப்பனவற்றிற்கு உதாரணமாக வைத்தியநாத நாவலர் வகுத்த "இலக்கண விளக்கம், (Constantius Beschi) என்ற வீரமாமுனிவ ரியற்றிய "தொன்னூல் விளக்கம்," சுப்பிரமணிய தீக்ஷிதர்செய்த "பிரயோகவிவேகம்" சுவாமிநாத தேசிகரியற்றிய "இலக்கணக்கொத்து" என்பனவற்றைக்கொள்க. நீதிசற்குண சம்பந்தமானவற்றிற்கு உதாரணமாக மேற்கூறிய வைத்தியநாத நாவலரும் வீரமாமுனிவரும் முறையேசெய்த "பிரபோத சந்திரோதயம்" "தேம்பாவணி" முதலிய வற்றைக் கொள்க. தமிழில் வசனநடை விசேஷமா யெழுத ஆரம்பித்ததும் இந்நூற்றாண்டிலே தான் என்பதுபின்னே நியாயவாதங்களாற்காட்டற்படும்.

மேற்கூறிய பிரபந்தங்களின் விஷயங்களித் தன்மையானவையென்பதும், அவற்றின்பயனி வையென்பதும், அப்பிரபந்தங்களின் தாரதமியமின்னவென்பதும், இவற்றை யியற்றினவர்களின் சாமர்த்திய மினைத்து என்பதும், அவர்கள் பிறப்புவளர்ப்புகளைப்பற்றிய சரித்திரமின்னதென்பதும் அடங்கிய "புலவர் சரித்திரம்" ஒன்று வெளியிடுமெண்ணத்தோடு இதையாரம்போபந்நியாசமாக எழுதத்தலைப்பட்டோம்.

வி. கோ. சூரியநாராயண சாஸ்திரி.

## மாதர் மஞ்சரி

## III வேஸல் பெருமாட்டி.

"உள்ள முடைமை யுடைமை; பொருளுடைமை நில்லாது நீங்கி விடும்*." குறள்.

நமது இந்தியா தேசத்திற்கு வடமேற்குப் பக்கத்தில் ஆப்கானிஸ்தான் என்ற பெயர்பெற்ற, மலைகளும் காடுகளும் அடர்ந்த, ஓர் தேச மிருக்கின்றது. அத்தேசத்திற் பல கூட்டத்தார் உளர். அவர்களுக்குள் எப்பொழுதும் போர் நடந்துகொண்டே யிருக்கும் ஆனால் வேற்றரசர் படையெடுத்து வரும்பொழுது மாத்திரம், எல்லோரும் ஒருங்கு சேர்ந்து கொண்டு அவர்களை யெதிர்க்கத் தலைப்படுவார்கள். அவர்கள் சட்டதிட்டங்களுக்கு அடங்காத காட்டுத்தனமான மிலேச்சர்கள். வெகு பராக்கிரம சாலிகள். அயல் தேசத்தார் தங்கள் விஷயங்களில் தலையிடச் சம்மதிக்கமாட்டார்கள். அவர்களுக்குள் ஆயுதப் பயிற்சி யில்லாதவர்கள் கிடையார். குழந்தைகள் கைகளிலுங் கூடக் கூர்மையான கத்திகளைக் காணலாம். அன்றியும் அவர்கள் குதிரை யேற்றத்தில் தேர்ந்தவர்களாயும், பசிதாகம் களைப்புமுதலியவற்றிற்கு எளிதிற்கீழ்ப்படாச் சரீரத்திடமுள்ளவர்களாயும், பலவிதத் தேகாப்பியாசங்கள் கரடிவித்தைகள் முதலியவற்றிற்சிறந்தவர்களாயுமிருக்கிறார்கள். இக்குணங்களையுடையவர்களாயிருப்பதுடன், வஞ்சகம், அசத்தியம், பழிக்குப்பழி வாங்கவிரும்புந்தன்மை, கொடூரம், சிற்றின்பப் பிரியம், பேராசை, முதலிய துர்க்குணங்களும் நிறைந்தவர்களாயிருக்கிறார்கள். அவர்களுடைய தேசமும் அவர்கள் குணங்களுக்கு ஏற்றதாகவே யிருக்கின்றது. எங்கும் செங்குத்தான பாறைகளும், காடுகளும், குகைகளுமாயிருக்கின்றன. நம் தேசத்திலிருந்து அவர்கள் தேசத்துக்குப் போகும் பாதை வெகு அபாயமுள்ளது. திருடர்களால் வாசஞ் செய்யப்பட்டது. அவ்வழியாய்ச் சேனைகள் செல்வது மிகவும் கஷ்டமான காரியம். அக்காட்டு மனிதர் தயவின்றிச் செல்லலரிது. அத்தேசத்து அரசனுக்கு ஆமீர் என்பது பட்டப்பெயர்.

1838—39-ம் வருஷங்களில் ஆப்கானிஸ்தான் மிலேச்ச சாதிகளுக்குள்கொடும்போர் நடந்துகொண்டிருந்தது. சிலசாதியார் டாஸ்ட் மகமத் என்பவனை ஆமீர் ஆக்கல்வேண்டுமென்றும் மற்றசாதியார் ஷாஜ் ஷூஜா என்பவனை ஆமீர் ஆக்கல்வேண்டு மென்றும் விரும்பினார்கள். அவர்களுக்குள் சண்டை நடந்து கொண்டிருக்குங் காலத்தில், நமது இந்தியா தேசத்தை ஆண்டுவந்த ஆங்கிலேய துரைத்தனத்தார், ஆமீரைத் தங்கள் கைவசப்படுத்திக்கொள்ள அதே சமய மென்று கருதி, அச்சண்டையில் தலையிட எத்தனித்தார்கள். தங்கள் முயற்சியால்ஷாஜ்ஷூஜாவை ஆமீராக்கிவிட்டால் அவன் தங்கள் சொற்படி நடப்பான்: அதனால் தாங்கள் பெரும்பயனை யடையலாம் என்று நினைத்தார்கள். ஆனால் ஆப்கானிஸ்தான்தேசத்தார் தங்கள் நன்மையைக் கருதும் அயல் நாட்டாரையுங் கூடத் தங்கள் விஷயங்களில் தலையிட வொட்டாரென்பதையும் பிறரால் நியமிக்கப்படும் அரசனுக்கு உட்படாரென்பதையும் ஆங்கிலேய துரைத்

* "ஊக்க முடைமையே ஒருவனுக்கு நிலை நின்ற உடைமையாவது; மற்றைப்பொருளுடைமை நிலை நில்லாது நீங்கிப்போம்." பரிமேலழகர்.

தனத்தார் மறந்து விட்டார்கள். முதலிற் கோரிய வாறு முடித்துக்கொண்ட போதிலும், பிற்பாடு அவர் கள் பட்ட கஷ்டங்கள் பல. அத்துன்பங்களுக்குட் பட்டவர்களில் ஒருத்தியாகிய ஸேல்பெருமாட்டியின் நித்திய விஷயக்குறிப்புப் புஸ்தகத்திலிருந்து, அவை களைப்பற்றிச் சுருக்கிக்கூறுவோம்.

முதலில் ஆங்கிலேய சேனை வெற்றியடைந்தது. இராஜதானியாகிய காபூலில் ஷாஜ்ஷுஜா ஆங்கி லேயதுரைத்தனத்தாரால் ஆமீராகமுடிசூட்டப்பட் டான். கடைசியாய் டாஸ்ட்மகமத் அடைக்கலம்புக, அவனைப்போர்க்கைதியாக,மனைவிமக்களுடன், இந் தியாவுக்கனுப்பிவிட்டார்கள். போரெல்லாம் முடிந் தது போலிருந்தன. ஆங்கிலேயசேனைவீரர்கள், காபூ லுக்கு வரும்படி தங்கள் மனைவிமக்களுக்கு எழுதி வருவித்தார்கள். இப்படியிருக்கும் பொழுது கில்ஸி என்ற ஓர் சாதியார் தங்களுக்குக் கொஞ்சம் பணம் ஆமீரிடமிருந்து வரவேண்டுமென்று சண்டைக்குஆ ரம்பித்தார்கள். வெடிமருந்தில் தீயிட்டாற்போலாயி ற்று. திடீரென்று சகலசாதியாரும் படையெடுத்தார் கள். இந்தியாவுக்கு வரும்பாதைகளை யெல்லாம் தடு த்துவிட்டார்கள். காபூல் நகரைக்கைக்கொண்டு,சில ஆங்கிலேய அதிகாரிகளையும்மனிதர்களையுங்கொன்று ர்கள். ஆங்கிலேயஅதிகாரிகள் இயன்றமட்டும் எதிர்க் கமுயலாமல் சமாதானம் பேசத்தொடங்கினார்கள். அத்தேசத்தாரின் தலைவன் டாஸ்ட்மகமதின் புத்திரர் களிலொருவனாகிய ஆக்பர்கான் என்பவன். அவன் வெகுதுஷ்டன். சமாதானம் பேச வந்தவர்களைக்கூட வஞ்சகமாய்க்கொன்று விட்டான். அவன்ஆங்கிலேய அதிகாரிகள் மனிதர்கள் முதலியவர்களுடைய மனை விமக்களைத் தன் வசம் நல்நடக்கை யடைமானமாக ஒப்புவித்துவிட்டால், மற்றவர்களை இந்தியாவுக்குத் திரும்பிச் செல்ல விடுவதாகச் சொன்னான். முதலில் ஆங்கிலேய அதிகாரிகள், அவனிடம் ஒப்புவித்தலைப் பார்க்கிலும் தங்கள் மனைவிகளைச் சுட்டு விடுவதே நலமென வெண்ணினார்கள். ஆனால் அப்பொழுது மஞ்சுகாலமாயிருந்தது. பொறுக்க முடியாப் பனி பெய்தது.

1842-ம் வருஷம் ஜனவரிமாதம் 6-ம் தேதியன்று ஆங்கிலேய சேனை காபூலிலிருந்து பின்னிட்டது. சேனையுடன் குதிரைமேல் வந்த ஸேல்பெருமாட்டி தன் ஆடை, பனியால் மூடப்பட்டதாக எழுதியிருக் கிறாள். முதல் நாள் இரவிலேயே அநேகர் பனியினா லும் களைப்பினாலு மிறந்து போனார்கள். அத்தேசத் துக் காட்டுமனிதர்கள் கூட்டங்கூட்டமாய்ச் சேனை யைத் தொடர்ந்து, துப்பாக்கிகளைத் தூக்கமுடியா மற் கைகள் விறைத்துப்போன நம்தேசத்துச் 'சிபா ய்'களை, ஆடுகளைவெட்டுவதுபோல் வெட்டியெறிந்தா ர்கள். பெண்பிள்ளைகளும் குழந்தைகளும் பட்டதுன் பம் கொஞ்சமல்ல. ஸேல்பெருமாட்டியும், அவள் மக ளாகிய ஸ்டர்ட் துரை மனைவியும், தைரியத்தைக் கை விடாமல்,மற்றவர்களுக்குவழிகாட்டிச் சென்றார்கள். அவர்களுடையஊக்கத்தைப்பற்றிஅதிகாரிகள் புகழ் ந்துபேசினார்கள்.காட்டுமனிதர்கள்கூட அதிசயித்தா ர்கள். ஆக்பர்கானுக்கு அஞ்சி ஸேல்பெருமாட்டியும் அவள் புத்திரியும் மாறுவேஷம்பூண்டு கொண்டு, சேனைவீரர்களுக்கு மத்தியே சென்றார்கள். இரண் டாம் நாளன்றுகாட்டுமனிதர்கள் ஆங்கிலேய சேனை யை நோக்கிச் சுடத்தலைப்பட்டார்கள். ஸேல்பெரு மாட்டிக்கு ஓர் காயம்பட்டது. குதிரைமேலிருந்த அவள் புத்திரி, குதிரை சுடப்பட்டிறந்ததினாற் கீழே விழுந்தாள். அப்புத்திரியின்கணவராகியஸ்டர்ட்துரை மரணகாயத்தை யடைந்தார். அவரை யொரு வண் டியில் வைத்திழுக்க, அது அவர் துன்பத்தை யதிக ரித்தது. அவருக்கு மரணதாக மெடுத்தவுடன்போது மான தண்ணீர் கிடைக்கவில்லை. அவர் இவ்விதத் துன்பத்திலிறந்தார். அப்பொழுதுங் கூட ஸேல்பெ ருமாட்டி மனந்தளரவில்லை.

கஷ்டங்கள் வரவர அதிகரித்தன. பாதையெல் லாம் பிணங்களாலும் களைத்தவர்களாலும் நிரம் பின. மறுபடியும் ஆக்பர்கான் பெண்பிள்ளைகளை யும் குழந்தைகளையும் தன் வசம் ஒப்புவிக்கும்படி கேட்டான். அப்படிச் செய்தாலொழிய அவர்கள் பிழைப்பது முடியாததா யிருந்தது. ஒன்பது பெரு மாட்டிகளும், இருபது கனவான்களும், பதினாலு குழந்தைகளும், அவன் வசம் அடைமானக் கைதிக ளாக ஒப்புவிக்கப்பட்டார்கள். * அவர்களைத் தன் விருந்தினராகப் பாவித்து, மரியாதையுடன் நடத்தி வந்தான். ஆனால் அவர்கள் ஆயுதங்கள், வெடிமரு ந்து முதலியவற்றை வைத்துக் கொள்ள அவன் இணங்கவில்லை. அவர்கள் கொலைப் பயத்தினால் மிக வும் சஞ்சலப்பட்டார்கள்.

அந்த நாற்பத்துமூன்று கைதிகளும் ஆக்பர் வசம் எட்டரைமாதகாலம் இருந்தார்கள். அக்காலத்தில் கருப்பவதிகள் பிரசவமானார்கள்.அவர்களில் இறந்து போன ஸ்டர்ட்துரை மனைவியாகிய ஸேல்பெரு மாட்டி மகள் ஒருத்தி. அக்காலத்தில் ஸேல்பெரு மாட்டி யெழுதிய நித்திய விஷயக்குறிப்புப் புஸ்தகம் சந்தோஷத்தைக் கொடுக்கத்தக்கதா யிருக்கின்றது. பட்ட கஷ்டங்களைப்பற்றிக்கூறும்பொழுதுகூட அப் பெருமாட்டி குதூகலத்துடன் எழுதுகிறாள். மனத் தளர்ச்சி சிறிதும் கிடையாது. அநேகசமயங்களில், சிறு அறைகளில் ஆடுகளைப்போல் அடைக்கப்பட் டார்கள். அநேகருக்கு உடுத்திருந்த உடை தவிர

* மற்றவர்கள் இந்தியாவுக்குச் சென்றார்கள். அவர் கள் தொகை பதினாறாயிரம். அவர்களில் ஒருவன் தான் பிழைத்தான். மற்றவர்கள் யாவரும் ஆக்பரு டைய மனிதர்களாற் கொல்லப்பட்டார்கள்.

வேறு ஆடை யில்லாமலிருந்தது. ஒருசமயத்தில் முகங் கழுவுவதற்குக்கூடத் தண்ணீர் அரிதாயிருந்தது. அவர்களிருந்த அறைகளில் மூட்டைகளும் ஈக்களும் ஏராளமாயிருந்தன. அவர்களுக்குக் கொடுக்கப்பட்ட உணவைப் பார்த்தமாத்திரத்திற் பசியோடிப்போய்விடும். அதற்காகத் தாங்களே சமைத்துச் சாப்பிட ஆரம்பித்தார்கள். அவர்களுக்கு நூல், ஊசி, துணி முதலியவை கொடுக்கப்பட்டன. அதனால் பொழுதுபோக்கினதுந்தவிர, ஆடைகளும் செய்து கொண்டார்கள். சில பெருமாட்டிகள் சமையற்காரிகளாகவும், சிலர் வேலைக்காரிகளாகவும், சிலர் வண்ணாத்திகளாகவும், ஒருசமயத்திற் சிலர் தச்சர்களாகவுங்கூட வேலை செய்தார்கள். ஸேல்பெருமாட்டி ஒருசமயத்திற் காற்றோட்டத்திற்காகச் சுவரிற் பல கணி யுண்டாக்கும்பொருட்டுத் தான் கொத்துவேலை செய்ததாக வெழுதியிருக்கிறாள். அச்சமயத்தில் அவள் கைகள் நொந்து புண்பட்டனவாம். ஸேல் பெருமாட்டியின் கணவராகிய ஸேல்பிரபு என்னும் சேனாபதி, கைதிகளை விடுவிப்பதற்காக முயன்றுகொண்டிருந்தார். அவருக்குக் கடிதங்கள் எழுதுவதற்கு ஆக்பருடைய சம்மதம் பெற்றிருந்தாள். அவள் அச்சேனவீரருக்கு ஏற்ற மனைவி. போருக்குரிய தந்திரங்களெல்லாம் அவளுக்கு நன்றாய்த் தெரியும். ஆக்பருடைய போர் நடைகளைப்பற்றி அவள் தன் கணவருக்குத் தெளிவாயும் சாமர்த்தியமாயு மெழுதினாள். அவள் எழுதிய கடிதங்களிற் சில இந்தியா கவர்னர் ஜனரலுக்கும் சேநாதிபதிக்கும் மேற்பார்க்கும் சபையாருக்குங்கூட அனுப்பப்பட்டன. தன் கணவருடைய பராக்கிரமத்தைப் பற்றி அவள் வெகு பெருமையை யடைந்திருந்தாள். ஒரு சமயத்தில் அவருக்கு வெகுமானமாக ஓர் வாள் கொடுக்கப்பட்டதினால் தனக்குண்டான ஆநந்தத்தைப் பற்றி யெழுதி யிருக்கிறாள். தன் ஊக்கத்துக்காகத் தன்னைப் பிறர் புகழ்வதில் அவளுக்குப் பெருமை கிடையாது.

ஆப்கானிஸ்தானில் அடிக்கடி பூமியதிர்ப்பு உண்டாகும். அதனால் நேரிடக்கூடிய அபாயங்களைப்பற்றி நினைத்தமாத்திரத்தில் மனம் பதறும். ஆனால் ஸேல் பெருமாட்டி சிறிதும் பயப்படவில்லை, அதைப் பற்றிச் சாதாரணமாக எழுதுகிறாள், "இன்றைக்கு மூன்று உடுப்புகள் தைத்தேன்." என்று எப்படிக்கவலையற்று எழுதுவோமோ, அதுபோலவே "இன்றைக்குப் பூமியதிர்ப்பு அதிகம்." என்று அடிக்கடியெழுதுகிறாள். ஒரு நாள் ஸேல்பெருமாட்டி கூரையிற் சில துணிகளை வெயிலிற் போட்டுக் கொண்டிருக்கும் பொழுது, பூமி திடீரென்று அதிரத்தொடங்கிற்று. அவள் கீழேயிறங்கித் தப்பிக்கொண்டவுடன், அவ்வீடு இடிந்து விழுந்து இருந்த விடந்தெரியாமற்கீழே யாழ்ந்து விட்டது. பெண்பிள்ளைகளிடத்திற்சிறிதும் அபிப்பிராயங் கேட்காமல் விடுதலைச் சமாதானம் பேசுவதைப்பற்றி யவள் கோபமாய் எழுதுகிறாள். அடைமானக் கைதிகளுக்கு அபாயம் நேரிடுமென்று பயந்து ஆக்பரானை யெதிர்த்துப் போர் செய்யாமலிருக்கக் கூடாதென்று தன்கணவருக்கு எழுதினாள். "இப்பொழுது தான் நல்ல சமயம்; நாங்கள் ஆக்பர் கைவச மிருக்கிறோமென்று சிறிதும் யோசிக்க வேண்டாம். நம்முடைய தேசத்தின் அந்தஸ்தைப் பற்றி யோசிக்கும் பொழுது நாங்கள் இறப்பது பெரியகாரியமா? இதனால் நான் சாகவிரும்புகிறேனென்றுசொல்லவில்லை. ஆப்கானிஸ்தானில் ஆங்கிலேய ஜயக்கொடி பறப்பதைப்பார்க்கலாமென்று எண்ணியிருக்கிறேன்," என்று எழுதினாள்.

எச்சமயத்திலும்சந்தோஷமாய் எழுதுவாளென்று கூறினோம். சில திருடர்கள் அவளுடைய மருந்து சீசாக்களை திருடிக்கொண்டுபோக, அவளெழுதுகிறாள்:—"சீசாக்களிலுள்ள மருந்துகளை யுபயோகப்படுத்திப் பயனடைவார்களென்று நம்புகிறேன். ஒன்றில் அக்கினித்திராவகமும், மற்றொன்றில் வேறொரு கொரோமருந்து மிருக்கின்றன."

கொஞ்சநாட்களில் அவளுடைய கணவராகிய ஸேல்பிரபுவும், மற்றொருசேனா வீரரும் அவர்களை விடுவிக்க வந்து சேர்ந்தார்கள். அப்பொழுது அவள் அசௌக்கியமாயிருந்த போதிலும், வெகு சந்தோஷத்துடன் எதிர்கொண்டு புறப்பட்டாள். கொஞ்சம் சமயம் தப்பியிருந்தால் ஆக்பர் கைதிகளை மறுபடியும் சிறைப்படுத்தியிருப்பான். அவளுக்குத் தன்கணவரைக்கண்டவுடன் ஆநந்தக் கண்ணீர் பெருகிற்று. அவள் தன்னுடைய ஊக்கத்தின் பயனை முற்றிலும் பெற்றாள்.

ஸேல்பெருமாட்டி சிறைப்படுமுன் அரண்மனைகளில் தாதிகள் சூழ வெகு செல்வத்தில் வாழ்ந்தவளென்பதை நினைக்கும்பொழுது, அவள் ஊக்கத்தின் பெருமை நன்றாய் விளங்கும்.

பேரோசீ.

## அங்கிலேயரின் குணகுணங்கள்.

II

இத்தேசத்தில் நாம் பாத்திரமறிந்து தருமம் செய்வதில்லையாயினும்; ஈகைஇரக்கம், பச்சாதாபமாகியஇக்குணங்களில் அங்கிலேயரைவிட நாம் மிகவும்மேலானவர்களாகவேயிருக்கிறோம். நம் தேசத்தார் பல ஜாதி வருணங்களாகப் பிரிந்து பேதப்பட்டிருப்பினும், நம்மவர்களுக்குள் ளிருக்கும் சகோதரவாஞ்சை அங்கிலேயர்களுக்குள் இல்லை. நமது மதம், தருமஞ் செய்வதைப்போல் ஸத்காரியமில்லை என்று

போதிக்கிறது. நாம் தருமஞ்செய்வதெல்லாம் கடவுளுக்கு அர்ப்பிதமென்று நம்பி அவருடைய திரு அருளைக்கோரி நாம் செய்கிறோம். அங்கிலேயருக்குள் அப்படி இல்லை. அவர்கள் செய்வது சாதாரணமாய் உலகக்கட்டுப்பாட்டுக்கு உட்பட்டேயாம். அவர்கள் தங்கள் தேசப்பொது விஷயத்தில் என்ன ஒற்றுமையுள்ளவர்களா யிருப்பினும், என்னதான் சுயநலம் பாராட்டா தவர்களாயிருப்பினும், ஒருவருக்கொருவர் ஒத்தாசை செய்து அந்நியோந்நியமா யிருக்கவேண்டுமென்கிற மானுட வாஞ்சை அவர்களிடத்தில் பொதுவாய்க் கிடையாதென்று அவர்கள் தேசத்தில் சென்று அவர்களோடு சாதாரணமாகக் கலந்து பழகி அவர்கள் மாதிரியை யறிந்த ஒருவர் சொல்லுகிறார். சுயநலத்தை நாடி ஒருவருக்கொருவர் எவ்வளவோ ஒற்றுமை பாராட்டி, ஆயிரம் பேரானலும் அரைநாழிகை சச்சரவு கூடவின்றி யாவரும் ஒரு மனதாய்க் கூடி யுழைத்து வருவார்கள். "ஐயோ! அயலானுயிற்றே! அந்நியனுயிற்றே" என்று பச்சாதாபம் ஒன்றே காரணமாக மனதிரங்கி ஒருதவியும் செய்து வரமாட்டார்கள்.

தேசப் பொது விஷயங்களும் பொதுக்ஷேம விஷயங்களுமன்றி மற்ற விஷயங்களிலெல்லாம் அவன் வன்பாடுஅவனவனோடேயென்றிருப்பார்களேயன்றி ஒருவன் மற்றொருவன் காரியத்தைப்பற்றி விசாரிக்கவு மாட்டான்; மற்றவன் தன் காரியத்தைப் பிறன் விசாரிக்கவும் விடமாட்டான். இருவர் அநேக வருஷகாலம் அந்நியோந்நிய சிநேகர்களாயிருந்து பாலும் நீரும்போல் கலந்து பழகிவந்தாலும், ஒருவன் வருமானம் இவ்வளவென்று இன்னொருவனுக்குத் தெரியாதிருக்கும். அந்தரங்க காரியங்களை அயலாருக்குத் தெரியாமல் மூடிவைத்துக்கொள்ள ஆங்கிலேயரைப்போல் பாடுபடுகிறவர்கள் உலகத்தில் வேறொருவர் இரார். அவர்கள் எப்போதும் வெளி வேஷம்போட்டு ஜீவிப்பவர்களே. உள்ளுக்கு ளிருப்ப தொன்று; வெளிக்கு வேஷம் போடுவதொன்று. நாம் ஜாதி பேதத்தால் பல வேறுபட்டுப்பிரிந்துள்ள போதிலும், ஆபத்து வந்தகாலத்தில் ஜாதி பேதத்தையும் பார்க்காமல் ஒருவருக்கொருவர்எவ்வளவோ ஒத்தாசை செய்துவருகிறோம். ஒரு கிராமத்திலுள்ளவர்களில் ஒருவன் வீட்டில், யாருக்காவது ஒரு விபத்து வந்து விட்டால் மற்றவர்களெல்லோரும் பிராமணன், சூத்திரன், வண்ணன், இடையனென்றுபாராமல் ஒவ்வொரு ஜாதியானும் அவனிடத்தில் அநுதாபம் வைத்து அவ்வவனுக்கு இசைந்த வாறு பலபேர் பலவிதமாய் அவனுக்கு வேண்டிய உதவி செய்கிறார்கள். ஒரு வீட்டில் ஒருவன் செத்தால் ஊரிலுள்ளவர்கள் ஒன்று கூடி அவனுக்கு வேண்டிய உதவி செய்து ஆகவேண்டிய காரியங்களைச் செத்த வீட்டுக்காரனுக்கு வருத்தங் கொடுக்காமலே தாங்களே வலுவில் வந்து செய்வார்கள். ஒரு கிராமத்தில் ஒருவன் வியாதியாய்ப் படுத்துகொண்டால் ஊரிலுள்ளவர்களெல்லாம் அவன் வீட்டுத்திண்ணையில் வந்துட்கார்ந்து கொண்டு வைத்தியனைக் கூப்பிட ஓடுகிறவனொருவனும், மருந்து வாங்கி வர ஓடுகிறவனொருவனும், பச்சிலை கொண்டுவர ஓடுகிறவ னொருவனுமாகப் பலபேர் பலவிதத்தில் அவனுக்கு ஒத்தாசைசெய்வார்கள். இங்கிலாந்தில் இப்பேர்ப்பட்ட விஷயங்களுக்கெல்லாம் ஒருவன் மற்றொருவனுக்கு ஒத்தாசை செய்வது தன் கடமையாக எண்ணான். இதெல்லாவற்றிற்கும் காசு செலவழித்தே அத்தேசத்தில் காரியமாக வேண்டும். காசு ஒன்று மட்டு மிருந்தால் அத்தேசத்தில் ஆகாத வேலை யொன்று மில்லை. வியாதியஸ்தர் கிட்ட விருந்து அவருக்கு வேண்டிய உபசாரங்கள் செய்து அவர்களைப் போஷித்து வரவேண்டுமானல் அதற்காக வேண்டிய வைத்தியப் பயிற்சியடைந்து அதுவே ஜீவனத்தொழிலாகக்கொண்டிருக்கும் மாதர்களிருக்கிறார்கள். ஒருவன் செத்தான். அவன் பிணத்தை யெடுத்துக் கொண்டுபோ யடக்கம் செய்ய வேண்டுமானல், அதையொரு ஜீவனமாக வைத்துக் கொண்டிருக்கும் தொழிலாளிகளிருக்கிறார்கள். இப்படி ஒவ்வொரு விஷயத்துக்கும் தக்க தொழிலாளிகள் இருக்கிறார்கள். நம்மவர்களில் சாவுமுதலிய நேர்ந்தவிடத்து இப்படிப்பட்ட விஷயங்களுக்குப் பணங்கொடுத்து ஒருவனை நியமிப்பது மெத்த ஈனமாக எண்ணப்படுகிறது. நம்மவர்களில் ஒருவன் என்ன ஏழையா யிருந்த போதிலும் இப்பேர்ப்பட்ட விஷயங்களில் தன்னூரானுக்குச் செய்யும் உதவிக்குப் பணம் வாங்கவேண்டுமென்று சொற்பனத்திலும் நினையான். நம்மவரில் ஒருவன் எவ்வளவு பணக்காரனு யிருந்தாலும் இப்பேர்ப்பட்ட விஷயங்களில் தனக்கு உதவி செய்யும் தன்னூரான் எவ்வளவுஏழையாயிருந்தாலும் இவ்வுதவிக்காக அவனுக்குப் பணங் கொடுக்கிறேனென்று சொல்ல ஒருபோதும் துணியான். அவன் அப்படிச்சொல்வானுனல் இதை விடப் பிரமாதமான பிசகு அவன் செய்யத்தக்க தொன்றுமில்லை. உடனே ஊரா ரெல்லாம் சேர்ந்துகொண்டு அவன் கருவத்தைத் தராமட்டமாக இறக்கி விடுவார்கள்.

நாம் முன் சொல்லியபடி இங்கிலாந்தில் ஜனங்கள் இது விஷயங்களிலெல்லாம் வேறு விதமாய் நடந்து கொள்ளுகிறார்கள். அத்தேசத்தில் ஜனங்களுக்குத் தான் என்கிற அகம்பாவம் அதிகமாய் முற்றி அவர்கள் மனதில் வேரூன்றிப் போயிருக்கிறது. எல்லாம் "என் காரியம், என் வேலை, என் பாடு." எல்லாவற்றிலும் என், நான் என்பது பிரதானமாய் நிற்கும். இது சிறு பிராயம் தொட்டே அவர்கள் மனதிற் பதி

ந்து வேருன்றி வருகிறது. இந்தக் குணம் அந்நியர் அயலார் சம்பந்தப்பட்டமட்டில்தானென்று இல்லை. அவர்கள் குடும்பசம்பந்தமும் இப்படியேதானிருக்கிறது. பிள்ளைகளும் பெண்களும் அவர்களுக்கு வயது வருகிறமட்டுமே பெற்றோர் வீட்டிலிருப்பார்கள். பிறகு இறகு முளைத்தபக்ஷி தன் கூட்டை விட்டு ஓடித் தானாக இரை தேடிப்பிழைப்பதுபோல அவர்கள் பெற்றோர் அகத்தை விட்டுப் பிரிந்து தாங்கள் சுய ஜீவனம் செய்யும் வழியைப்பார்ப்பார்கள். அத்தேசத்தில் பெற்றோர்கள்கடமை தங்கள் பெண்கள் பிள்ளைகளுக்கு வயதுவருகிறமட்டும் அவர்களைச் சம்ரக்ஷணைசெய்து அதற்குள் அவர்கள் பின்னுக்குப் பிழைப்பதற்குபயோகமான கல்வியோ கைத்தொழிலோ தங்கள் சக்திக்குத் தக்கபடி அவர்களுக்குக் கற்றுக்கொடுப்பதோடு நின்றுபோகிறது. அவர்கள் பெண்கள் பிள்ளைகளுக்கு உக-வயது ஆய்விட்டால் பெற்றோர்க்கு அவர்கள் மீது சட்டப்படி யாதொரு அதிகாரமுமில்லை; அவர்களை அப்புறம் தங்கள்வீட்டில் வைத்துக் காப்பாற்ற வேண்டுமென்கிற கடனுமில்லை. உக-வயது ஆய்விட்டால் ஆணாயிருந்தாலும் சரி, பெண்ணாயிருந்தாலும் சரி வெளிப்பட்டுச்சொந்த ஜீவனம் செய்யவேண்டியதுதான். அவ்வயதுக்குப்பின் பெற்றோர்கள் தம்மக்களைத் தங்கள் வீட்டிலிருக்க விடுகிறதில்லை. வெளியில் போய்ப்பிழைக்கும் பெண்கள்பிள்ளைகளுக்குப் பெற்றோர்வீடு, விடுமுறை காலங்களில் தங்கள் சொந்த வீடாக விருக்கும். ஆனால், இப்படி அபூர்வமாய் வரும் விடுமுறை காலங்களில்தான் அவர்கள் வீட்டிலழைத்துக் கொண்டாடப்படுவோர்கள். அத்தேசத்தில் ஜீவனம் செய்வது கஷ்டமாதலால் ஜனங்கள் இத்தேசத்தாரைப்போல சோற்றுக்கின்றிக் கலியாணம்செய்துகொள்வதில்லை. அவன் அல்லது அவள் தனியாக வசிக்கப்போந்த ஜீவனவகை யிருந்தாலுங்கூட அவர்கள் கலியாணம் செய்துகொள்ளத் துணியார்கள். தங்கள் ஜீவனத்துக்குக்கண்டு ஒருகுடும்பத்தையும் காப்பாற்றுவதற்குப் போதுமான ஆஸ்தி அல்லது சம்பாத்திய மிருந்தாலன்றி ஆணாகட்டும், பெண்ணாகட்டும் கண்மூடித்தனமாய்க் கலியாணம் செய்துகொள்ளத் துணியார்கள். ஆதலால் பெண்களும் ஆண்களைப்போல் தங்களுக்கேற்ற வேலைகளிலமர்ந்து சுயஜீவனம் செய்யப்பார்ப்பார்கள்.

அத்தேசத்தில் பிச்சை எடுப்பது சட்டப்படி குற்றமாயிருப்பதால் ஏழைகள் ஸ்திதி அத்தேசத்தில் மகா கொடியது; இத்தேசத்தைப்போல அத்தேசத்தில் ஏழைகள் சோம்பற்சாவடியா யுட்கார்ந்திருந்து வருத்தமில்லாமல் பிச்சை வாங்கிப் பிழைக்கமுடியாது. இத்தேசத்தில் ஏழைகள் கலியாணம் செய்துகொண்டு பிள்ளைகளைப் பெற்றுப் பிச்சைவாங்கிப் பிழைக்கத் தெருவில் விடுவதுபோல அத்தேசத்தில் விடவும் கூடாது. பிள்ளைகளைப்பெற்றவர்கள் அப்பிள்ளைகளுக்கு வயதுவருகிறவரையில் அவர்களைக் காப்பாற்றக் கடமைப்பட்டிருப்பதன்றி கச-வயது வரையில் அப்பிள்ளைகளை யாதொரு வேலைக்கும் அழைத்துக்கொண்டு போகாமல் பள்ளிக்கூடத்துக்கனுப்பிப் படிக்க வைக்கவேண்டுமென்கிற சட்ட நிர்ப்பந்தத்துக்கும் அவர்கள் கட்டுப்பட்டிருக்கிறார்கள். அத்தேசத்தில் வயது வந்த பிள்ளைகள், மூப்படைந்த தங்கள் பெற்றோர்களைக் காப்பாற்றவேண்டுமென்கிற சட்ட நிர்ப்பந்தமில்லை. சாதாரணமாய்ப் பெற்றோர்கள் என்ன வயோதிகரா யிருப்பினும் தங்களுக்குச் சக்தியுள்ளமட்டில் தங்கள் சொந்த முயற்சியால் ஜீவனம் செய்து வருவார்களேயன்றி அவர்கள் பிள்ளைகள் என்ன உன்னத பதவியிலிருந்தாலும் அவர்களிடம் போய்ச் சோற்றுக்கு நிற்கமாட்டார்கள். பிள்ளை பெரிய அந்தஸ்துள்ள வேலையிலிருக்கையில் பெற்றவன் சாதாரண ஊழியம் செய்யும் வேலையிலிருந்து தன் பாட்டுக்குப் பிழைத்து வருவது அத்தேசத்தில் மிகவும் சாதாரணம். பிள்ளை, பெற்றோரைப் போஷிக்கக் கடமைப்பட் டில்லாததுபோலே பெற்றோர்களும் அந்திக் காலத்தில் பிள்ளைகள் உதவியை எதிர் பார்ப்பதில்லை. அவர்கள் சொந்த முயற்சியால் ஸ்வாதீனமாக விருந்து சீவனம் செய்ய முடியாவிட்டால் கிழம் கட்டை நொண்டி முடம் தள்ளாதவர்களுக்குதவிசெய்யச் சர்க்காரில் ஏற்பட்டுள்ள வேலைச்சாலைக்குச் சென்று அங்கு அவர்களாலான வேலையைச் செய்து சர்க்கார் தர்மத்தில் ஜீவித்து வருவார்கள்.

நாம் மேலே சொல்லியவெல்லாம் ஜனங்களிற் பொதுவாய் வழங்கிவருவதையே குறித்துச்சொன்னோம். மிகப்பணக்காரர்களா யிருக்கிறவர்கள் தங்கள் மக்களுக்கு உக-வயதான பின்னும்அவர்களுக்கு விவாகமாகி வேறாகப் போகிறவரையில் தங்கள் வசத்திலே வைத்துப் போஷித்து வருவார்கள். இவ்வகுப்பார் விசேஷமாய்த் தங்கள் பெண்களைப்பற்றி அதிக கவலையெடுத்துக் கொள்வார்கள். அவர்களுக்கு நல்ல வரன் பார்த்து விவாகம் செய்து வைப்பதோடு, அவர்கள், தாங்கள் பிறந்த அந்தஸ்துக்குக் குறைவன்றி வசித்து வரத்தக்கதாக அவர்களுக்கு ஸ்திரீதனம் அல்லது வேறு ஜீவனவகை தேடிக்கொடுப்பது பெற்றோர்களது பொறுப்பாய் எண்ணப்படுகிறது. எவ்வளவு தனவந்தரா யிருந்தாலும் விவாகமானபின் பிள்ளை தகப்பன் வீட்டில் வசிப்பதென்பது அத்தேசத்தில் கிடையாது. ஒருவனுக்கு விவாகமாய் விட்டால் பிறகு அவன் பெண்சாதி பிள்ளை குட்டி குடித்தனக்கவலை எல்லாம் அவன்தேயாம். நம்மைப்போல் மூன்றாந் தலைமுறை நாலாந்தலைமுறை வரை பிள்ளை, பேரன், கொள்பேரன் இவர்

கள் பெண்சாதி பிள்ளைகளெல்லாம் சேர்ந்து ஒரு குடும்பமாக வசிக்கமாட்டார்கள். அவ்வேற்பாட்டினால் இவர்களுக்கு இளவயது முதற்கொண்டே சுவாதீன குணமும், தைரியமும், துணிவுமுண்டாகி உலக வாழ்க்கையில் ஜீவனத்துக்குட்படவேண்டிய பாடுகளை எல்லாம் பட்டநுபவிக்க நம்மிலும் அவர்கள் திடசித்தர்களாய் அதிக சக்தி யுடையவர்களா யிருக்கிறார்கள். அவனவன் தன் குடும்பத்தைமட்டுமே காப்பாற்றக்கடமைப்பட்டவனென்றிருப்பதால்ஒருவன் சம்பாத்தியத்தால் அவன்எட்டாந் தலைமுறை யுறவினரெல்லாம் அவரவர்பெண்டாட்டி பிள்ளைகளோடு அவனை அட்டைபோல் ஒட்டியிருந்து அவன்சம்பாத்தியத்தையெல்லாம் உருஞ்சிவர வகையில்லை. ஒருவன் தேடிய பொருளைக்கொண்டு பலபேர் குடும்பத்தோடு சோம்பேறிகளா யிருந்து பிழைக்க இடமுமில்லை. இதனால் அவனவன் தன்னாலானதைச் சம்பாதிக்க அவனாலான முயற்சியெல்லாம் செய்துவரஆவசியகம் நேரிடுவதால் இயல்பாகவே அவர்களுடைய சம்பாத்தியம் அதிகப்பட்டு மொத்தத்தில் தேசக்ஷேமமுண்டாவதற்குக் காரணமா யிருக்கிறது.

C. V. S.

---

## சாவித்திரி சரித்திரம்.

---

### மூன்றாவது அதிகாரம்.

திருவநந்தபுரக் கடிதம் வந்து ஒருமாதத்திற்குள் நாங்கள் கோவிந்தப்புரத்தை விட்டுத் திருநெல்வேலிக்கு வந்துவிட்டோம். என் தகப்பனருக்கு நேரிட்ட பல துர்ப்பாக்கியங்களால் அவர் அவ்வூரில் இருக்க விரும்பவில்லை. அன்றியுங் கோபாலன் படிப்பின் பொருட்டும், எங்களுக்குக் கலியாணஞ் செய்விக்கும் பொருட்டும், அவர் எவ்விதமாவது பணஞ் சம்பாதிக்க வேண்டியதாயிற்று. அவருக்கு இயற்கையாகவே கர்வமுண்டு; அப்பொழுது நேரிட்ட துர்ப்பாக்கியங்களால் அக்கர்வம் அதிகரித்தது. ஆறுதல் சொல்லவந்த இஷ்டர்களைத் தன்னைக்கேலி பண்ணவந்தவராக நினைக்கத் தொடங்கினர். யாரேனும் தன்னைக்கண்டு இரங்கினல், அவர்களைத் தன் துர்ப்பாக்கியத்தைக்கண்டு இரகசியத்திற் சந்தோஷப்படும் விரோதிகளாக வெண்ணினர். இவ்விதக் கோபம் சிலநாட்களிற் பொறுக்க முடியாததாயிற்று. எவ்விதமேனும் பணஞ் சம்பாதிக்க வேண்டுமென்ற பேராசை அவர் மனதிற் குடிகொண்டது. அவர் எங்களுடன் பேசுகிறதில்லை. சரியானபடி சாப்பிடுகிறதுகூடவில்லை. எப்பொழுதுந் தலையிற் கையை வைத்துக்கொண்டு யோசனையில் ஆழ்ந்திருந்தார்.

இவ்விதம் இரண்டுவாரங் கழிந்தபின்பு அவர் ஒரு நாள் என் அத்தையம்மா ளிடத்திற் சொன்னதாவது:— "சங்கரி! நான் சொல்வதை ஊடே தடுக்காமற் கேள். இந்த வீட்டையும், மீந்தவயலையும் விற்றுவிடப்போகிறேன். இவ்வூரில் இனிமேல் என்னால் இருக்கமுடியாது. கோபாலனும் சாவித்திரியும் உன்னுடன் திருநெல்வேலியிலிருக்கட்டும். அவர்களுடைய சாப்பாட்டுச் செலவுக்கு நான் பணமனுப்புகிறேன். கோபாலனுக்குப் பள்ளிக்கூடச் சம்பளம் இல்லாமற் செய்ய முயற்சிக்க வேண்டும். ஆனால்—". "நீர் எங்கே போகிறீர்?" என்று நான் கேட்டேன். அவர் உடனே:—"பேசாதே! சங்கரீகேள்: நான் திருவநந்தபுரத்துக்குப் போகிறேன். நிலம் விற்றபணம் உன்னிடமிருக்கட்டும். அதைக்கொண்டு எப்படியாவது சாவித்திரிக்குக் கலியாணத்தை முடித்துவிடு: கோபாலனுக்குப் பிற்பாடு பார்த்துக்கொள்ளலாம்." என்றார். என் அத்தையம்மாள் தன்னாலானமட்டும் அவர் திருவநந்தபுரத்திற்குப் போகக்கூடாதென்றும், பிள்ளையிருக்கும்பொழுது வயலைவிற்றாலும் வீட்டை விற்கக்கூடாதென்றும், அவர் விருத்தாப்பியகாலத்தில்ஓரிடத்திற்கும் போகாமல் தன்கஞ்சியைப் பங்கிட்டுக் குடித்துக்கொண்டிருக்க வேண்டுமென்றும், பலவிதமாய்ச் சொல்லியும், நான் கூடத்திருவநந்தபுரத்திற்குப் போவேனென்றழுதும், ஒன்றும் பயன் படவில்லை. அவர் வீட்டையும் வயலையும் விற்றுப் பணத்தை யென் அத்தை கையிற்கொடுத்து,என்னையவளுடன் அனுப்பி விட்டுத், தான்திருநெல்வேலிக்கு எங்களுடன் வந்து கோபாலனைக்கூடப் பாராமல் நேராகத்திருவநந்த புரத்திற்குப்போய்விட்டார்.

எங்கள் குடும்பத்துக்கு வந்த துர்ப்பாக்கியம், எனக்கு நல்லதாகவே யிருந்தது. என் அத்தையம்மாள் என்னையுங் கோபாலனையும் வெகுஅன்புடன் நடத்தி வந்தாள்.கோபாலன்கூட இருப்பதினல் நான்வெகு மனமகிழ்ச்சியை யடைந்தேன். என் சிறு இருதயத்திலுள்ள ஆசையை யெல்லாம் கோபாலன் பேரிலும், என் அத்தைபேரிலுஞ் செலுத்தினேன். அத்தையம்மாளிடத்தில் வீட்டுவேலைகற்றுக் கொள்வதிலும், கோபாலன் வாசிப்பதைப் பார்த்துக்கொண்டிருப்பதிலும், நான் வெகுசந்தோஷத்தையடைந்தேன். என் அத்தையம்மாளைவிட அன்புள்ளவர்களும், கோபாலனைவிடப் படிப்பில் தேர்ந்தவர்களும், எங்கும் கிடையாரென்பது என் எண்ணம். கதைப்புஸ்தகங்களை வாசித்தபின் கோபாலன் எனக்குச் சொல்லுங் கதைகளைக் கேட்டு, எனக்குப் படிப்பில் ஆசையுண்டாயிற்று. ஆனல், பெண்கள் படிப்பதை நான் அப்பொழுது பார்த்ததில்லை.

கோபாலனுக்கு நடேசன் என்றொரு சிநேகிதனிருந்தான். அவனுங் கோபாலனும் பள்ளிக்கூடத்தில் ஒரே வகுப்பைச் சேர்ந்தவர்கள். அவர்கள் பிரிகிற

தே யில்லை. நடேசன் கோபாலனுடன் வாசித்து,எங்கள்வீட்டிலேயேபடுத்துக்கொள்வதுவழக்கம்.அவனுக்குக் கலியாணம் முடியவில்லை.என்அத்தையம்மாள் என்னை அவனுக்குக் கலியாணஞ் செய்யலாமென்று வேடிக்கையாய்ச் சொல்வதுண்டு. அவனும் வேடிக்கையாய் என்னைப்"பெண்டாட்டி"என்றழைப்பான், அவனுக்குங் கோபாலனுக்குஞ் சமவயது. ஒரு நாள் அவனுங்கோபாலனும் ஒரு இங்கிலீஷ் புஸ்தகம் வாசித்துக்கொண்டிருந்தார்கள். அவர்களுடையசந்தோஷத்தையும், சிரிப்பையும், அவர்கள் சில பாகங்களைக் கோபத்தொனியிலுஞ், சிலபாகங்களை இரக்கத்தொனியிலுஞ்; சிலபாகங்களை உரத்துப் பிரசங்கிப்பதுபோலும், வாசிப்பதையும்; சிலசமயங்களில் அப்புஸ்தகமெழுதினவரைப்பற்றிப் புகழ்வதையும் பார்த்து, நான் திறந்தவாயுடனும் விரிந்தகண்களுடனும் ஆச்சரியப்படடுக் கொண்டிருந்தேன். அவர்கள் கொஞ்சம் நிறுத்தினவுடன் "என்னவாசிக்கிறீர்கள்?" என்று கேட்டேன். உடனே நடேசன் சொன்னதாவது:—"நீங்களும் பெண்களென்றிருக்கிறீர்களே! நன்றாய்ச் சட்டி சுறண்டுவீர்கள். அதற்குத்தான் பிரயோசனப்படுவீர்கள். பெண்ணென்றிருந்தால் 'ஐடா'வைப்போலிருக்கவேண்டும். ஓ!ஐடா! ஐடா!! சாவித்திரி! நானினிமேல் உன்னைப் 'பெண்டாட்டி' என்று கூப்பிடமாட்டேன். நீயும் 'ஐடா' வைப்போலானால்தான் நானுன்னைக்கலியாணஞ் செய்துகொள்வேன்." என்று என் முதுகில் தட்டினான். அவன் கலியாணம் என்று சொல்வது வேடிக்கையாகத்தானென்று எனக்குத்தெரியும். ஆனால் அவன் வழக்கம்போல் அழையாமல், 'சாவித்திரி' யென்றழைத்தது என் காதுக்கு விநோதமாயிருந்தது. எனக்குத் தன்னையறியாமல் துக்கமுண்டாயிற்று. மணம்புரிந்திருந்த புருஷனை யிழந்ததுபோல் நினைத்தேன். அடங்காத்துக்கத்துடன், " 'ஐடா' வென்றாலென்ன?" வென்று கேட்டேன். அதற்குநடேசன் பதிற்சென்னதாவது:—

"ஓரரசனுக்கு 'ஐடா' என்றொரு புத்திரி யிருந்தாள். உன்னைப்போலிருக்கும் பொழுதே யவளை அயல்தேசத்து இராச புத்திரனுக்குப் பிற்பாடு கலியாணஞ்செய்து கொடுப்பதாக அவ்வரசன் வாக்குக் கொடுத்திருந்தான். உன் அத்தை யெனக்குச்சொல்வது போலன்று. கள்ளச்சிறுக்கி! உன்னை யெவன் கலியாணஞ் செய்துகொள்ளப் போகிறானோ? ஒருவன் வருகிறவரையுமாவது நான் 'பெண்டாட்டி' யென்று கூப்பிட்டுக் கொண்டிருக்கிறேன். ஆனால் 'ஐடா' வைநிச்சயமாக அவ்விராச குமாரனுக்கே கொடுப்பதாகத் தீர்மானிக்கப்பட்டிருந்தது. 'ஐடா' கல்வியில் தேர்ச்சியடைந்தாள். தக்கவயது வந்தவுடன், அக்கலியாணத்துச் சிசையாமல், பெண்பிள்ளைகளைப் புருஷர்கள் தங்கள் அடிமைகளைப்போல் நடத்துவதை வெறுத்து, அவ்விழிவான நிலைமையினின்றும் மாதர்களை விடுவிக்கும் பொருட்டு ஓர் சர்வகலாசாலை யேற்படுத்தினாள். அப்பள்ளிக்கூடத்துக்குள் புருஷர்களை விடுகிறதேயில்லை. வாத்தியார் வேலைமுதல் நிலம் உழுகிறவேலைவரையும், எல்லாவற்றையும் பெண்பிள்ளைகளே பார்த்துவந்தார்கள். ஆனால் அவ்விராசகுமாரனோ பாலியமோகத்தால் வருத்தமடைந்து வேறுவழியின்றி, இரண்டு சிநேகிதர்களுடன் பெண்வேஷம் பூண்டுகொண்டு, கற்கவிரும்பினாற்போல் அப்பள்ளிக்கூடத்துக்குட் சென்றான். 'ஐடா' வைக்கண்ட மாத்திரத்தில் அவன் ஆசை அளவின்றிப் பெருகிற்று. கடைசியாய் மூவர்களுடைய பாசாங்கும் கண்டுபிடிக்கப்பட்டு அவர்கள் வெளியே துரத்தப்பட்டார்கள். அதன்பின் 'ஐடா' வைத் தொந்தரவு செய்ததற்காக, அவளுடையசகோதரர்புரிந்தசண்டையில், இவ்வரசகுமாரன் காயங்களால் மூர்ச்சித்தான். வெட்டுண்டவர்கள் பள்ளிக்கூடத்துக்குள் எடுத்துக்கொண்டு போகப்பட்டு, அங்கேயே சொஸ்தப்படுத்தப்பட்டார்கள். இராசகுமாரனை 'ஐடா'வே சொஸ்தப்படுத்தினாள். 'ஐடா'தான் புருஷரை முற்றிலும் பிரித்தது இயற்கைக்கு விரோதமானதென்றும், பெண்களின்நிலைமையை விருத்திசெய்யவேண்டியது முக்கியமாயிருந்தாலும்,அதன்பொருட்டுக்காதலைப்புழித்தல்சரியல்லவென்றும், பெண்களின் நிலைமையை விருத்தி செய்யாமல் புருஷர்கள் மாத்திரம் விருத்தியடைவது முடியாத காரியமென்றும், அக்காலத்தில் தானறிந்தாள். அவ்விராசகுமாரன்பிழைக்கும்பொருட்டு அவனுக்கு ஓர் அமிர்த சஞ்சீவி கொடுத்தாள். அதென்னவெனில், 'ஐடா' அவனைக்கலியாணஞ் செய்து கொண்டாள். பெண்டாட்டி! நான் சொல்லுகிறது அவ்வளவு நன்றாயிராது. இங்கிலீஷில்வாசித்தால் இக்கதையின் அழகு வெளிப்படும். இந்த ஜன்மத்தில் நீயிதைப்போன்றபுஸ்தகங்களின் இன்பத்தை யநுபவிக்கப் போகிறதில்லை. நீ கொடுத்துவைத்தது அவ்வளவுதான்" என்று விசனத்துடன் சொன்னான்.உடனே நான்:— "தமிழே தெரியாதே. நீங்கள் சொல்லிக் கொடுக்காவிட்டால் எங்களுக்கு எப்படித்தெரியும்?" என்றேன். அதற்கு நடேசன்:— "இன்று முதல் நீ படிக்கிறதாயிருந்தால் நான் சொல்லித்தருகிறேன்," என்றான்.

கோபாலன்:—"நடேசா! நேற்று நீ 'சிறுவர் சங்கத்துக்கு வரவில்லையே. 'பெண்கல்வி'யைப் பற்றியோர் தர்க்கம் நடந்தது. பெண்களைக்கற்பித்தால் அவர்கள் கடிதமூலமாய்ச் சோரநாயகர்களைத் தேடுவார்களென்றும், தங்கள் கணவர்களுக்குக் கீழ்ப்படிந்து

டக்கமாட்டார்களென்றும், வீட்டுவேலை செய்யமாட்டார்களென்றும், உத்தியோகஞ்செய்யப் போகாதவர்களுக்குப்படிப்பு ஆவசியகமல்லவென்றும், நம்முடைய பாட்டியார்கள் படிக்கவில்லையென்றும் கணபதி வாதாடினன். அதற்கு நீ யென்ன சொல்லுகிறாய்?''

நடேசன்:—''ஓகோ! அப்படியா? நானில்லாமற் போனேனே. நான் சொல்வதைக் கேள். பெண்டாட்டி! நீயுங்கேள். கற்றிருந்தாற் சோரநாயகர்களைத் தேடுவார்களென்பது வீண்பேச்சு. தங்கள்நாயகர்கள் மேலிஷ்டமில்லாப்பெண்கள், மூடர்களாயிருந்தால் ஒருவேளை வேறு புருஷர்களைத்தேடுவார்கள். ஆனால் சரியாய்க் கற்றுணர்ந்தவர்கள் ஒரு பொழுதும் அப்படிச் செய்யமாட்டார்கள். கல்வியும் நாணத்தைப் போல் ஓர் கவசமாய் விடும். அன்றியும், எழுதத்தெரியாத ஒரு குறையினால் மாத்திரம் வேறு நாயகனைத் தேடாமலிருக்கும் மனைவி யிருந்தென்ன? இறந்தென்ன? அது வீண் முகாந்தரமே. கற்றிருந்தால் வீட்டுவேலை செய்யக்கூடாதா? தன் வீட்டில் வேலைசெய்தல் ஊழியமாகுமோ? அவ்வெண்ணம் அற்பப்படிப்பைச் சேர்ந்தது.கல்வி பணஞ் சம்பாதிக்கும்பொருட்டுத்தானென்பது மூடத்தனம். கல்வி பணத்தினுஞ் சிறந்ததல்லவா? அன்றியும்,புத்திரர்கள் சிறந்த புத்தியுள்ளவர்களா யிருக்கவேண்டுமாயின் தாய் தந்தையர்களும் அப்படி யிருந்தாலன்றோ சரி? பாறையின் பேரில் நெல்விளையுமோ? உழுது உரமிட்டப்பட்ட நிலமன்றோ வேண்டும்?'' என்றான்.

கோபாலன்:—''சரி: மற்ற முகாந்தரங்களுக்கு என்ன சொல்கிறாய்?''

நடேசன்:—''பெண்கள் கீழ்ப்படிய மாட்டார்களென்பது வீண். சரியான காதலிருந்தால் அவ்வெண்ணமே யுண்டாகாது. அவர்களென்ன அடிமைகளோ? இருவர் மனமும் ஒத்தாலன்றோ சரி? அதற்குக்கல்விமுக்கியமானது.அதில்லாமலுண்டாகும் கீழ்ப்படிதல் பயத்தினாலும், வழக்கத்தினாலு முண்[illegible] வதே. மனவிருப்பத்தின லுண்டாவதன்று. பு[illegible] னும் தக்கவனயிருக்க வேண்டும். நேசமிரு[illegible] மற்றவையெல்லாம் தானேவரும். நமது பாட்[illegible] படிக்க[illegible]ல்லை யென்பதைக்கேட்க எனக்குச் [illegible] வருகிறது. முற்காலத்திற் பெண்கள் கல்வித்[illegible] சியடைந்திருந்தார்க ளென்பதற்கு அநேக [illegible] ரங்க ளிருக்கின்றன. அப்படி யில்லாவிட்[illegible] தானென்ன? முன்னோர்கள் மூடர்களா[illegible] தால் [illegible]மும் அப்படியே யிருக்கவேண்டுமா. [illegible] ண்மை! [illegible]

[illegible] ஆத [illegible] டியார் [illegible] சிரிப்பு [illegible] தேர்ச் [illegible] ஆதா [illegible] லுங் [illegible] யிருந் [illegible] இதெ [illegible] லத்து

என்று குறளி[illegible] த்தியார்[illegible] ளுக்[illegible] ''வி[illegible]

அவ[illegible] கும் கற்பி[illegible] அத்தையம்மாள[illegible] பது வருத்தமா யிரு[illegible] க்கு மூளையில்லை. அத[illegible] னிருக்கிறது.'' என்று அ[illegible]சா[illegible] நான் சரியானபடி பாடஞ்சொல்லா விட்டா[illegible] னுக்குக் கோபம்வந்துவிடும். புஸ்தகத்தை யெறி[illegible] விட்டுப்போய் விடுவான். ஆனால், நடேசன் அப்படிச்செய்கிறதில்லை. வெகு பொறுமையுடன் சொல்லித்தருவான். அவனுக்குக் கோபமேவராது. நானிவ்விதமாய்ப்படித்து வந்தேன்.

[இவ்வதிகாரத்தில் கூறியவற்றை நான் அவ்வயதிலேயே முழுதும் உணர்ந்ததாகக்கொள்ளக்கூடாது. பிற்பாடு பலமுறை கேட்டுணர்ந்தவற்றைத்தா னிப்பொழுது எழுதுகிறேன்.]

சாவித்திரி.

---

## தமிழ்மொழி வளர்த்தல்.

அல்லது

## தமிழ்ப் பாஷையை அபிவிர்த்தி செய்யும் மார்க்கங்கள்.

(88-வது பக்கத் தொடர்ச்சி.)

மூன்றாவது, இந்நாளும் உலகத்திற்கு மறைபொருளாக இருந்துவரும் பழய அரிய தமிழ்நூ பெரியவை அச்சிடு[illegible] விஷயம். இதைத்தல[illegible] ிவர் அங்கங்கே முக்கி[illegible] சிறிது முயற்சித்து வரினும், எடுக்கவேண்டிய அளவிற்கு உழைப்பெடுக்கவில்லையென்று தெரியவரும். சென்னையில் சரவணப்பெருமாள் ஐயர் முதலியோரிருந்து தமிழ் அச்சுக்கூடங்கள் ஸ்தாபித்தது முதல் திருக்குறள்முதலிய அநேகம் தமிழ்நூல்கள் உலகத்தில் வெளிவந்திருப்பினும், அவைபோல்வன இன்னும் அநேக நூல்கள் வெளிவராதிருக்கின்றன. உதாரணமாக, தமிழ்ப் பஞ்சகாவியங்களாகிய சிந்தாம[illegible]ி, சிலப்பதிகாரம், மணிமேகலை, குண்டலகேசி, வளையாபதி என்கிற நூல்களில் சிலநாளுக்குமுன் சிந்தாமணியும், சிலப்பதிகாரத்தில் புகார்காண்டமும் தவிர, சிலப்பதிகாரத்தில் மற்றைய விரண்டு காண்டமும், மற்றமூன்று காவியங்களும் இன்னும் வெளிவராதிருக்கின்றன. இந்தக்காலத்தில் அவைகளே மாயாமல் இருக்கின்றனவோ இறந்தொழிந்தனவோ என்பதே நமக்குஐயப்பாடாகஇருக்கின்றது.

...ல்காப்பியம் ...வஜங்க ... சி. ...ப் ...ந்த ...ல்வழி, ...வு மாத்திர ..., இன்னும் அருங் ...ான்மணிக்கோவை, ...பத்து முதலிய பிரபந்த ... எனும் ... யறியபாடில்லே. அவைகள் ... அகப்படுமோ, அதுவும் அறிவுக்கு எட்டவி ... மதுரைக்கடைச்சங்கத்து வித்வான்கள் இயற்றிய அரிய நூல்கள், எவ்விடத்தில் அகப்படுமோ, அல்லது, அவ்வளவும் வாழ்வகன்றனவோ அறியோம். இதில், எட்டு வித்வான்கள் செய்த பத்துப்பாட்டு மாத்திரம் கும்பகோணம் காலேஜ் தமிழ்ப் பண்டிதராயும், தமிழுக்குச் சலியாத பரிபாலகராயும் இருக்கும் மகா-ா-ா-ஸ்ரீ வே. சாமிநாதய்யர் அவர்களால் கண்டுபிடிக்கப்பட்டு நச்சினார்க் கினியாருரையுடன் இப்போது அச்சிடப்பட்டு வருகிறதாகக் கேள்விப்படவே, தமிழ் பாஷாபிமானிகள் அனைவருக்கும் உள்ளமும் உடலும் குளிர்ந்தன. இன்னும், மற்றைய ஆயிரக்கணக்கான பிரபந்தங்களெல்லாம் எப்போது வெளிவரும்? நாம் இப்படித் துயின்று கொண்டிருந்தால் எப்படி வெளிவரும்? அநேக வீடுகளில் அநேக ஏட்டுக் கிரந்தங்கள் இருக்கின்றன. அவை, செல்லரித்துப் புழுதிபடிந்து, இருட்டு நிலவறைகளிற் சிறைப்பட்டும், வருஷமொரு வட்டம் சரஸ்வதிபூசை யன்றைய்தினம் மாத்திரம் (அதுவும் ...தேகம்) வெளிச்சம் இன்னவாறு இருக்குமென்று கண்டும், ... கிடைத்மடிவதை ... போய்ப் பார்த்தால் வயிறெரியக் காணலாம். அந்நூல்களை இயற்றியோர் இப்போது எழுந்துவருவாராயின், இப்படி அந்நூல்களைத் தபிக்கவிட்டோரையும் அதேவித மாய்வருந்திமடியும்படி சபிப்பார்கள்என்பதற்கு ஐயமில்லை. அவைகள்இன்னும் அந்நிலையிற்கொஞ்சநாள் இருந்தால், அக்கினிபகவானுக்கு அர்ச்சனை செய்யவே உதவும். அவைகளுக்கு அந்தச் சிறைச்சாலே, அல்லது, சித்திரவதைச்சாலையைவிட்டு என்றைக்குவிடுதலையாகிஜனங்களுடைய திர்ஷ்டியாகிய மோக்ஷசாம்பிராஜ்ஜியம் கிடைக்குமோ, அதை ஜகதீசனே அறிவார். அவைகளை அச்சுக்குக் கொடுக்கும்படி உடையோரைக் கேட்டால், அவர் "நமக்கென்ன தெரிகின்றது; அவை பழையகாலக் கிரந்தங்கள்; இதுவரைக்கும் அவைகளை நாம்வெளியில் எடுத்ததேயில்லை; இப்போது அந்நூல்களை மனிதர் எடுத்துவாசிக்கும்படி அவைகளுக்கு என்ன கஷ்டதசை வந்துவிட்டது? சும்மா தூங்கட்டும்," என்றிப்படி உண்மைப் பாஷாபிமானிகளுடைய முகத்தில் கரியை வாரித் தேய்ப்பார்கள். அப்புறம், நாம் ஏன் இந்த அவதிக்குப்போனோம் என்று கேட்பவரும் சப்தநாடியும் தளர்ந்து போகின்றார்கள். வீட்டிலேயாவது அந்நூல்களை உடையோர் வாசித்திருப்பார்களோ வென்றால், அந்தப்பாஷையே தங்களுக்குத் தெரியாதது போலிருப்பார்கள். அப்படிப்பட்டவரைக் கொண்டு, உலகத்திற்கு என்ன சாதகம்? அவர்கள் இல்லாவிட்டால், உலகத்திற்கு என்ன பாதகம்? கனவான்களே, இப்படிக் காலாந்தரத்தில் யாருக்கும் உதவாமல் மறைந்தொழியும் கிரந்தங்கள் பல்லாயிரம்! பல்லாயிரம்! மனிதரிறந்தால் நமக்கு அவ்வளவு துக்கம் உண்டாகின்றதில்லை. கிரந்தமிறந்தால், என்றுந்துன்பமேயொழிய வேறில்லை. அது எப்படியென்னில், கம்பர் இறந்தது இப்போது உலகத்திற்கு ஒரு ஆச்சரியமாகவுமில்லை, துக்கமாகவுமில்லை. அவரியற்றிய பெருங்காவிய மிறந்திருந்தால், அந்தத்துக்கத்தைஉலகம் பொறுக்குமோ? பொறுக்காது, பொறுக்காது. ஆகையால் நூலென்பது உயிரிலும் அதிகம்! எப்போதும் வேற்றுமைப் பட்டுழலுகின்ற உலகவியாபாரத்தில் அந்நூலென்பதும் அறிவாரற்று, ஆதரவற்று, மடிந்தொழியாமற் பாதுகாப்பது ஒவ்வோர் உண்மைத் தேசாபிமானியையும் பொறுத்த கடனென்பது இதனால் விளங்கும்.

இனி நான்காவது, தமிழில் நூதன கிரந்தங்களியற்றுதல், தமிழ்மொழியை அபிவிர்த்திக்குக் கொண்டுவர மற்றொரு மார்க்கமென்ற உண்மையைச்சிலமுகாந்தரங்களால் எடுத்துவிளக்கிக் காட்டுவோம். இது முக்கியவிஷயத்தில் முற்கூறிய பழயநூல்களை அச்சிட்டு வெளிப்படுத்தும் மார்க்கத்துக்கு இணையாகவே சொல்லலாம். எல்லாம் அறக்கற்றவர் உலகத்தில் ஒருவருமில்லை, அதுபோல எல்லா விஷயத்திலும் யாதும் அறிந்த ஜாதியாரும் உலகத்தின்கண் இல்லையென்பது உறுதியாகத் துணியலாம். இதனாலன்றோ சரஸ்வதியே இன்னும் கற்றுக்கொண்டிருக்கிறாள், என்று மேற்சொல்லிய உட்கருத்தை ரூபகாலங்காரப்படுத்தி நம்மவர்கள் சொல்லுகின்றார்கள். ஒருவிஷயத்தில் ஒருவன் அறிந்திருக்கும் அறிவைப்போல மற்றொருவன், வாசித்தவனாகிலும், அறிந்திராதது இயல்பே. அதுபோல ஒரு ஜாதியாரும் ... துறையில் ...கிப் பாடுபட்டு அறிந்திருக்கும் அறிவு, மற்றொரு ... ஜாதியார் அதேவிதமாய் அதில் அறியாதிருப்பது ... உலக வியற்கையே. நமக்குள்ளாகவே, கம்மாளர் ... அடைந்திருக்கும் பயிற்சி, தட்டாருக்குள் இல்லை; ... தட்டார் அறிந்த பயிற்சி, கைக்கோளர் அறியார். ... தொழில்கள் ... அறிந்த... ஜாதிய...

கும் உண்மைகளை, மற்றொரு ஜாதியார் அதே விதமாக, அத்தனை நன்றாய் அறிந்தவராய்க் காணப்படவில்லை. இப்போது பரலோகத்திற்கு வேண்டிய மத சம்பந்தமாகவும், மற்றும் அனேக சாஸ்திர சம்பந்தமாகவும், நம்முன்னோர் அறிந்திருந்த அறிவு மற்றெந்த ஜாதியாரிடத்தும் இல்லையென்பது, யாவரும் சம்மதிக்கற்பாலதாம். ஆகினும், இப்போது, இகலோக ஞானவித் ஜடசாஸ்திரசம்பந்தமான (Science) விஷயங்களில், நம்மவர் மேற்கத்தியவரில் எவ்வளவோ தாழ்ந்தபடியில் நிற்கின்றாரென்பதும் வாஸ்தவமே. இப்படிச் சொல்லுவதனால், இது நமக்கு ஓர்குறைவு மாகவில்லை. புதிதாய்க் கல்விகற்பது ஒருவருக்கும் ஒருபோதும் குறைவாகாது. மனக்கலப்பு என்பது உலகத்தில் மனிதருக்குள்ளும், மனித ஜாதியார் ஒவ்வொருவருக்குள்ளும், பரஸ்பரம் இருக்க வேண்டுமென்றே, கடவுள் இப்படி சர்வஞ்ஞத்துவம் ஒரு ஜாதியாரிடத்தும் விட்டுக் கொடுக்காமலிருந்தது! கல்லது, அது எப்படியாயினும், அங்கிலேயர் நம்மிடத்திலிருந்து அறியத்தக்க காரியங்கள் அனேகம் நம்மிடத்தி லிருப்பதுபோல, நாமும் அவசியமாய்க் கற்றுக்கொள்ளத்தக்க பல காரியங்கள் அவர்களிடம் இருப்பது இயல்பே. இது, முக்கியமாய், தேசசரித்திரப் பயிற்சியும், (Science) 'சைன்ஸ்' என்னும் பொதுப் பெயரையுடைய பல ஜடசாஸ்திரப்பயிற்சியுமேயாம். அவர்கள், இவ்விஷயத்தில், அப்ரிமிதமான பயிற்சி யடைந்திருப்பதற்கு, ரயில்வண்டியும், சமாசாரத் தந்தியும், அச்சுயந்திரமுமே போதுமான சாட்சிசொல்லும். இது விஷயத்தில் நம்மவரும் பயிற்சியடைய வேண்டியது அவசியமோ, இல்லையோ? நாம் அனைவரும் சந்நியாசம்பெற்றுத், துறவிகளாகப் பரலோக சிந்தை மாத்திரமேபூண்டு, காட்டுக்குப் போகாமல் நாட்டுக்குள் இருக்குமட்டும், அதுஅவ்சியந்தான். ஆகவே, அதைக் கற்றுக்கொள்ளுவதற்கு வழியெப்படி? அவர்கள் அவ்விஷயத்தி லிறங்கி அறிந்த அறிவை, அதுபோல நம்மவரும் இறங்கிப் பாடுபட்டு அறிவது வருத்தமாயிருந்தால், அவர்கள் அவ்வறிவை யடக்கி எழுதியிருக்கும் அங்கிலேய நூல்களையேனும் நாம் தமிழில் மொழிபெயர்த்துக் கொள்ளுவதே வழி. அப்படிச்செய்வதற்குத் தமிழ்மொழி போதுமான விரிவுடையது தானென்று எனது எளிய அபிப்பிராயத்திற்றோன்றுகின்றது. சிலவார்த்தைகள் போதாவிட்டால் அவைகளுக்கு நம் வடமொழியிலிருந்து, பதங்கள் எடுத்துஉபயோகித்துக் கொள்வது சாத்தியமே. இப்படிப்பட்ட நூல்களை சுயபாஷையில் மொழி பெயர்த்துத் தருவது அங்கிலேயம் படித்த சுதேசிகளின் கடமையென்று முன்சொன்னோமே. இனி, இதிலொரு முக்கியமான விஷயம் இங்கு கவனிக்கத்தக்கதாக விருக்கின்றது. அதென்னவெனில், நம்முடைய தமிழில், தொன்றுதொட்டு, வித்வான்கள் கிரந்தசம்பந்தமாக எடுத்து வந்த நடை, செய்யுள் நடையேயன்றி, வாசகநடையன்று. ஆனால், (Science) சைன்ஸிலுள்ள உண்மைகள், மோனை, எதுகைகளாகிய தடைகளின்றித் துல்லியமாய்த் தெரிவிக்க வேண்டியனவாகையால், அதற்குச் செய்யுள்நடை ஒருபோதும்ஏற்காது; வாசகநடையே அதற்கு எவ்விதத்திலும் ஒத்துவருவது. செய்யுள்நடை, அறிவில் உண்மையைத் தனியாயுணர்த்தும் துல்லியம்பெறுதற்கு இடையூறுகளான கடினநடை; எதுகை, மோனை, அலங்காரம், தளையென்னும் பலவிதத் தடைகளை யுடையது. ஆகையால், இவ்விஷயத்தில் வசனகாவியங்கள் எழுதிப் பெருக்குவது எவ்வளவும் அவசியம். அப்படி எழுதும்போது, காலத்திற்கும், விஷயத்திற்கும் ஏற்றபடி, புதிதாய் வார்த்தைகள் பிறந்து நடைபெற்று, உலாவும். இது தமிழ் பாஷாபிவிர்த்திக்கு ஒரு பெருங்காரண மாகுமென்பது இதனால் விளங்கும். அங்கிலேயபாஷையும், முந்நூறு வருஷங்களுக்கு முன் நமது பாஷை இப்போதிருக்கும் நிலையிலேயே யிருந்தது. அப்புறம் ஒவ்வொருகாலத்திலும் இருந்த ஷேக்ஸ்பியர், (Shakespeare) மில்டன், (Milton) அடிஸன், (Addison) ஜான்ஸன், (Johnson) மெக்காலே (Macaulay) என்ற இவர் போன்ற பற்பல மகாவித்வான்களால், தாங்கள் எடுத்துக்கொண்ட விரிவான விஷயங்களுக்கு ஏற்ப, நூதன வார்த்தைகள் ஏற்பட்டுக் கொண்டதால்; கடைசியில் அது பாஷைவளர்ச்சிக்கு ஒரு பெரும் சாதனமாய், அவ்வங்கிலேயம், இப்போது, எப்படிப்பட்ட கருத்தையும், எள்ளுக்காய் பிளந்ததுபோல; சரிதுல்லியமாய் உரைப்பதற்கு, ஏற்ற பாஷையாகிவிட்டது. இப்படியாக, கிரந்தகர்த்தர்களே பாஷை வளர்ச்சிக்கு மூலகாரணர்கள் ஆகின்றார்கள். கடற்கரை மணலுக்காவது கணக்குச் சொன்னாலும் அங்கிலேயர் எழுதிய கிரந்தங்களுக்குக் கணக்குச் சொல்ல மாளாது. இப்போதும் அங்கிலேயத்தில் வருஷமொன்றுக்கு; குறைந்த பக்ஷம், அவர்கள் (80,000) எண்பதினாயிரம் புதிய கிரந்தங்கள் அச்சிட்டு வெளிப்படுத்துவதாக உத்தேசக்கணக்கு எடுக்கப்பட்டிருக்கிறது! கல்வி இப்படியல்லவோ இருக்கவேண்டும்! நமது தேசத்தில் ஒரு புஸ்தகம் பதிக்கவே எத்தனை பாடு படுகிறோம்? வார்த்தையில் மட்டும் வெகுநீளமாய் நம்மிடத்தில் எல்லாம் இருக்கிறதென்று வம்புபேசியும், 'கானமயிலாடக் கண்டிருந்த வான்கோழி' போல் நமது முன்னோர் பெருமையை மாத்திரம் தேனொழுக மொழிந்துகொண்டும் இருந்துவிட்டாற் போதுமோ? பாட்டன் சீமானாய் இருந்தானென்பதனால் பட்டினிக்காரன் பசிதீருமோ? இது 'எல்லாம் இருக்கிறது பெட்டியிலே, இலைக்கறி கடையச் சட்டியில்லை,' என்ற பழமொழிக்கு இலக்காகின்றது! இது

நிற்க, இனி அப்படிக் கிரந்த காவியங்களெழுதும் கிரந்த கர்த்தர்களை யாதரிப்பதே,

தமிழ் பாஷாபிவிர்த்திக்கு ஐந்தாவது சாதனமாக இங்கு எடுத்துக் கொள்ளப்படும். முன்னர் நாம் பாஷா வளர்ச்சிக்கு, கிரந்த கர்த்தர்களே மூல காரணர்கள் ஆவார்களென்று சொன்னோமே. இப்போது செடிக்கு உரம்போடுவது, பழம்பறிக்க வழி தேடுவதாவதுபோல் புலவரை யாதரித்தல் பாஷாபிவிர்த்திக்குத் துணைக்காரணமென்று எளிதிற்றெளிந்து கொள்ளலாம். நமது தமிழ்ப்புலவர்களை முற்காலத்தில் சேர, சோழ, பாண்டியராகிய அரசர்கள் தங்கள் தங்கள் அரண்மனையிலேயே இருத்தி, அவர்கள் இயற்றிய நூல்களை ஆதரித்தும் பெரும்புகழ் படைத்துவந்தார்களென்பது யாவருக்கும் தெரிந்த விஷயம். அதிற் பாண்டிய ராஜன் விசேஷமாய் மதுரையில் தமிழ்ச் சங்கங்கள் ஏற்படுத்தி வித்வான்களை யாதரித்ததும் உலகப்பிரசித்தம். ஆனாலும், அப்புலவர்கள் அந்தக்காலத்திலும் சாதாரண ஜனங்களாலேஆதரிக்கப்பட்டு வந்தார்களென்பதற்குச் சிறிதும் சாக்ஷியங்கள் கிடையா. அது, கல்வி அபிவிர்த்தி ஜனங்களுக்குள் எங்கும் சாதாரணமாக அப்போது பரவியிருந்ததில்லை என்ற சந்தேகத்திற்கு உறுதி கொடுக்கின்றது. மேலும், ஜனங்களுக்குள் கல்வி பரவுதலுக்கு இக்காலத்தில் இன்றியமையாத கருவியாகின்ற அச்சுயந்திரம் போன்ற சாதனமொன்றும், அக்காலத்தில் இராமற்போனதும், புலவரை ஜனங்கள் ஆதரியாதிருந்ததற்கு மற்றொரு காரணமாய் நின்றது. இப்போது அங்கிலேய வித்வான்களின் நிலைமையும் தமிழ் வித்வான்களின் நிலைமையும் ஆராய்ந்தறிந்து அவைகளை ஒன்றோடொன்று ஒப்பிட்டுப் பார்க்கும் போது, அங்கிலேய வித்வான்கள், விசேஷமாய் ஜனங்களால் ஆதரிக்கப்பட்டும், தமிழ் வித்வான்கள் அப்படி ஆதரிக்கப்படாமலும், இருக்கக்காண்கிறோம், இதற்குக் காரணம் அங்கிலேயத்தில் ஜனங்களுள் கல்வி பரவி இருப்பதும், நமக்குள் அப்படிக்கின்றியுமிருப்பதே. நமக்கோ முன் சொற்பமாகினுமிருந்த அரசர் ஆதரவும் இப்போது அற்றுப்போய்விட்டது. அங்கிலேயத்தில் கல்வி எங்கும் பரவியிருக்கின்றகாரணத்தால் அங்கிலேய வித்வான்கள் தங்கள் வித்தையையே தொழிலாக எடுத்துக்கொண்டு, ஜனங்களையிட்டுப்பிழைத்தும், மேலும் அபரிமிதமானதிரவியம் ஈட்டியும் வருகின்றார்கள். நமது தமிழ் வித்வான்களுக்கு, முன் அப்படிப்பட்ட சகாயமேதேனும் இருந்திருந்தால், கீழ்வரும்பாட்டு உலகத்தில் தோன்ற நிமித்தமில்லை:—

"கல்லைத்தான் மண்ணைத்தான் காய்ச்சித்தான்
குடிக்கத்தான் கற்பித்தானா
இல்லைத்தான் பொன்னைத்தான்எனக்குத்தான்
கொடுத்துத்தானிரக்ஷித்தானா
அல்லைத்தான் பின்னைத்தான் ஆரைத்தான்
நோவத்தான் ஐயோ எங்கும்
பல்லைத்தான் திறக்கத்தான் பதுமத்தான் புவியிற்றான் பண்ணினானே,"

என்றிப்படி ஒரு தமிழ்வித்வான், தான்பட்ட பசிவருத்தத்தில் சோறுகிடையாமல், ஏமாந்து அலறியிருப்பதைப்பாருங்கள்! இதற்கு, நாம் முன் சொல்லியபடி,ஜனங்களுக்குள் கல்வி எங்கும் பரவாமலிருந்ததேகாரணம். ஆகையால், மேலைக்கு இயற்றப்படும் நூதன கிரந்தங்களைப் பாடசாலைகளிலாவது பாடமாக ஏற்படுத்தியும், கூடியவரையில் ஜனங்களுக்குள் கல்விப்பயிற்சி மேன்மேலும் பரவச்செய்தும் வந்தால் இந்தப் பெருங்குறைதீர்ந்து தமிழ்வித்வான்களும் சரியானபடி ஆதரிக்கப் படுவார்கள். வித்வான்கள் ஆதரிக்கப்படாமலிருப்பதைக் காட்டிலும் ஒரு நாட்டுக்குப் பெருங்குறைவு ஒன்றில்லை; ஆதரிக்கப்பட்டால், அவர் தமக்குப் பெரும்புகழும், உலகத்திற்குப் பேரறிவும் விளைப்பரென்பதில், யாதொரு சந்தேகமுமில்லை. இனி, மேற்கூறிய இரண்டு விஷயங்களுக்கும் சகாயமாயிருந்து, தமிழ் பாஷாபிவிர்த்திக்குப் பிறிதோர் மார்க்கமாயிருக்கின்ற

ஆறுவது, தமிழ் அச்சுக்கூடங்களை முக்கியமுள்ள இடங்களிலெல்லாம் ஸ்தாபிக்கும் காரியத்தைத்தொட்டுச் சில எண்ணங்களை எடுத்துரைப்போம். தமிழ் அச்சுக்கூடங்கள் தென்னிந்தியாவில் நிலை பெறச்செய்து சற்றேறக்குறைய ஐம்பது வருஷமாகி விட்டது. இப்போது அவைகள் மூலமாக அனேகம்கிரந்தங்கள் அந்தகாரமென்னும் கடலிலாழ்ந்து மடியாமல், கரையேற்றப்பட்டன. அரிய பெரிய கிரந்தங்களும், முன்னைப்போல, மூலைகளில் முடங்கிக்கொள்ளும் வீட்டு வித்வான்களிடம் சென்று, சீடத்தொழில் புரிந்து, கெஞ்சிக் கேட்டுப் பகர்த்தியெடுத்து, தனக்கு மாத்திரம் படித்துக்கொள்ளும் சங்கடமெல்லாம் நீங்கி, சொற்பமான பணத்தொகை கைமாறுவதனால், அடுத்த புஸ்தகசாலையில் வாங்கி எளிதில் ஒவ்வொருவரும் தத்தமக்கே வாசித்துக்கொள்ளும் படியான சௌகரிய நிலைமையிலும் வந்துவிட்டன. படிப்பதற்கு முன்னமே புஸ்தகம் அகப்பட்டுக்கொள்ள வேண்டியதற்கு, முன் பட்ட பாடெல்லாம்ஒழிந்தது. எப்போது ஒருக்கால் ஒரு புஸ்தகம் அச்சுயந்திர முத்திரை பதிந்து வெளிவந்து விட்டதோ, அப்போதே அப்புஸ்தகம் இனி ஒரு காரணத்தாலும், அழியாமலிருக்கத் தாம்பரசாஸ்னம் ஏற்பட்டதுபோல, அவ்வளவு உறுதியான நிலைமையில் வந்து விடுகிறது. மனிதரை ஒன்று கூட்டி, அங்கங்கே, ஆசிரியர்

மாணுக்கருக்கு உபதேசம் பண்ணுவதுபோல, பிரசங்க முதலியவைகளால் எடுத்துக் கூறவேண்டிய கஷ்டசாத்தியமான வேலைகளெல்லாம்,வெள்ளைக்காகிதம் செய்து விட்டுப் போகின்றது. அதற்கு, மேற்படி பிரசங்கங்களைப் போலவன்றி, எத்தனைதரம் வேண்டுமென்ருலும் திருப்பித் திருப்பி உண்மை திரட்டும் படியான அற்புதத்தன்மையும் இருக்கின்றது. எத்தனையோ ஆட்களை வைத்து, நீடித்தகாலம் உழன்று, பிரதிகள் பகர்த்தி எடுக்க வேண்டியதெல்லாம் போய், அற்பநேரத்திற்குள்,ஆயிரமாயிரமாகப் பிரதிகளை, படம்பிடித்தது போல் உண்மையாயும்,நட்சத்திரங்கள் பதித்ததுபோல் அழகாயும், எடுத்துக்கொள்ளும்படியான நன்மையெல்லாம் கிடைத்து விட்டது. இவ்வளவு பெருமைகளை எல்லாம் கொடுக்கக்கூடிய அச்சுயந்திரங்களை, இத்தென்னிந்தியாவில், இப்போதிருப்பதைக் காட்டிலும் இன்னும் பற்பல முக்கியமான இடங்களிலெல்லாம் நிலைநிறுத்தி, புஸ்தகங்களையும், பத்திரிகைகளையும், மழைபோல எங்கும் வாரி இறைத்துவிட்டால், ஜனங்களுக்குள் கல்விபிவிர்த்தி யாவதற்குத் தடையென்ன? அந்தஅச்சுயந்திரங்களையிட்டு எத்தனைபேருக்குப் பிழைப்பும், எத்தனை காரியங்களுக்கு அநுகூலமும், உண்டாகின்றனவென்று நினைத்துப்பாருங்கள்! அவை சொல்லிலடங்கா. ஆகையால், கனவான்களே, இத்தகைய அச்சுயந்திரங்களை எங்கும் நிலைபெறச்செய்தல் எவ்வளவும் அவசியம்! அவை யொவ்வொன்றும் தமிழ்பாஷையாகிய திவ்ய ஆலயத்தைத் தாங்கும் ஒவ்வொரு தூணும்! இது செல்வப்பேறும், தர்மசிந்தனையுமுடைய கனவான்கள் யாவரும்செய்யத்தக்கதே.இலாபம்விரும்புவோர்க்கு இது பெருத்த இலாபம்கொடுக்கக்கூடியது; அறிவுடையோருக்குப் பெரும்புகழ் விளைப்பது. அனேக தர்மங்கள் நடத்துகின்ற பேருக்கு இது ஒரு பெரிதா? இது ஒரு பெரிய தர்மமல்லவா? என்னைக்கேட்டால், இதினும் மேம்பட்டதர்மம் மற்ருென்றில்லை யென்பேன். ஏனென்ருல், நமக்கு பரலோக சாம்பிராஜ்ஜியம் கிடைக்கச் சாதனமாகும் மதவிஷயங்களும், அறவழிகளும், இகலோகசம்பந்தமான பொருளும், இன்பமும்,இன்னபடி யென்பதை உலகத்தோர் அனந்தம் பேருக்கு, சொற்பநேரத்தில் உணர்த்தும் தன்மையும், அதைச்சார்ந்த பேருக்கு வேலைசெய்து பிழைக்கும் வழியைக் கொடுக்கும் சுகிர்தமும், பொருந்திய வகைகளில் இதுவே முந்தியிருப்பதாதலால், இதற்கு மிஞ்சியதர்மம் மற்ருென்றும் இல்லையென்று ஐயமறத் துணியலாகும். கல்வியில்லையேல்,உலகமேயில்லையென்கலாமே. இதுநிற்க இனி,

ஏழாவது, தமிழ்ப்பத்திரிகைகள் உதித்து நடைபெற்று, தமிழுலகத்திலெங்கும் உலாவிப்பரவி வருவது, தமிழ் பாஷாபிவிர்த்திக்கு ஒரு பெரும்சாதனமாயிருப்பது பற்றி, இப்போது நினைவு கூருவோம். சமாசாரப்பத்திரிகைகளால் ஒரு நாட்டுக்கு உண்டாகக்கூடிய நன்மைகள் அளவிறந்தன. ஐரோப்பிய நாடுகளில் இவைகளாலுண்டாகும் அநுகூலங்களைத் தேர்ந்துபார்த்தால்,அந்நாடுகள் இப்போதுஅடைந்திருக்கும் நாகரீகமும், ஆக்கமும், செல்வாக்கும், பெரும்பான்மையும் இப்பத்திரிகைகளாலே வந்ததென்று ஐயந்திரிபறச் சொல்லலாம். அவைகள் முகமாக, சகலமான மத, சாஸ்திர, ராஜாங்க, வித்தியாபிவிர்த்தி, சமாசார விஷயங்களும் பொதுஜன நன்மைக்குரிய மற்றெல்லாக் காரியங்களும் அன்ருடு நடந்துவரும் சங்கதிகளும், உலகத்தில் எத்தனை தூரம் அகல இருப்போருக்கும், எளிதில் உடனே புலப்படுத்தப் படுகின்றது. சீமையில் ஒரு சமாசாரப்பத்திரிகைக்கிருக்கும் செல்வாக்கு ஒரு சர்க்காருக்கிருப்பது போலிருக்கின்றது. இத்தகைய பத்திரிகைகளில், எவ்விஷயங்களையும் பற்றி, எல்லாவித அபிப்பிராயங்களும், அச்சந்தவிர்த்து வெளியிடும் சுதந்தரப்பேறு இருக்கின்றபடியால், அவ்வவ்விஷயங்களின் உண்மைகள் அரிசியைச்சாவிபுடைத்தெடுப்பதுபோல எடுக்கப்பட்டு விளக்கமுறுகின்றன. பெரியவர் கொள்கையும், சிறியவர் கொள்கையும், உயர்ந்த கேள்வியும், சாதாரணக்கேள்வியும், மேன்மக்கள் இயல்பும், கீழ்மக்கள் ஒழுக்கமும், தத்துவப்பொருள்களும், இலௌகிக நடபடிகளும், வேடிக்கைக்கூத்தும், உலக இயற்கையில், செய்கையில் என்னென்னஉண்டோ அவ்வளவும், உள்ளது உள்ளபடி, பக்ஷபாதமின்றி, உலகத்தோருடைய அகக்கண்ணுக்குப் பத்திரிகை மூலமாகத் தோன்றி, அவைகளில் உண்மையும் உத்தமமும் தெரிந்தெடுக்கப் படுகின்றன. அதனுல், அறிவும் விர்த்தியாகி விசாலிக்கின்றது, பாஷையும் செழித்து வளர்ந்தோங்குகின்றது,திரவியமும் அபரிமிதமாய் ஈட்டப்படுகின்றது. ஒரு அங்கிலேயப் பத்திரிகைக்கு. வருஷமொன்றுக்கு, சுமார்-எ௰-லக்ஷம் ரூபாய் வரும்படி யிருக்கிறதாகக் கேள்வி! அந்நாடு இந்தியாவில் பத்திலொருபங்கே விஸ்தாரமாகிலும் அங்கு-௩௲- (மூவாயிரம்) பத்திரிகைகள் பிறந்து உலாவுகின்றன! இந்தியாதேசம் முழுதும் சேர்ந்தும், மூந்நூறு பத்திரிகைகளுக்கு மிஞ்சியிருக்கவில்லை; அம்மூவாயிரம் பத்திரிகைகளுக்குக் கையொப்பங்கள் எத்தனைகோடி யிருக்கலாமென்று ஊகித்துப்பாருங்கள்! பாரிஸ்பட்டணத்தில், ஒரு தினசரிப்பத்திரிகைக்கு, பத்துலக்ஷம் கையொபபக்காரர் உண்டாம்! தமிழ்நாட்டில் உயர்ந்த பத்திரிகைக்குக் கையொப்பம் 1500-க்கு மிஞ்சவில்லை. இப்படி ஆயிரக்கணக்காயும் லக்ஷத்தொகையாயும் மேற்றிசையில் அடிபடும் பத்திரிகைகளுக்கு வரும்படித்தொகையும் எவ்வளவினதென்று நினைக்கவுமொண்ணுது. இன்னுமொன்று, அப்பத்

திராதிபருக்கு எத்தனை சிப்பந்திகளேற்பட்டு, எத்தனைபேருக்குப் பிழைப்பு உண்டாகின்றது? பத்திரிகையில் வரும் பணவருவாயினும், ஜனங்களுக்குள் அவைகள் முகமாய்ப் பரக்கும் அறிவுவருவாயே அதிகமாயிருக்கும். இது இப்படியானல், -௩-கோடி ஜனங்கள் -௨௰௫- கோடிஜனங்களை அடக்கியாளும் வல்லமை பெற்றிருக்கும் அற்புதத்தின் மூலகாரணம் அறிவுவிர்த்தியேயென்று புலப்படவில்லையா? பத்திரிகையென்பது அவ்விடத்தில் கல்விகற்றோர் எவர்க்கும் (அதாவது நூற்றுக்கு சுமார் தொண்ணூறுபேர்; இவ்விந்தியாவில் நூற்றுக்கு ஐந்துபேர் மாத்திரமே யென்று தெரியவருகிறது) தாங்கள் உண்ணும் உணவுக்குத் துல்லியமாயிருந்து, அதுகிடையாதபோது, அவர்கள், பசியாற உணவுகிடையாதவர் போல, எங்கி இடுக்கண் அடைவார்களாம். சோறு உடம்புக்கு உணவாவதுபோல, பத்திரிகைமனசுக்கு உணவாகின்றது. இதில் இரண்டாவதையே அவர்கள் பெரிதாக எண்ணுவார்கள். பத்திரிகையெடுத்தெழுதுவோர் அவ்விடத்தில் சர்க்கார் உத்தியோகத்தை ஒருபொருட்டாயெண்ணார்கள். பத்திரிகாசிரியரைக் கண்ணியம் செய்வதுபோல், அங்கு ஜனங்கள்உத்தியோகஸ்தரைக் கண்ணியம்செய்யார்கள். ஜனங்களுக்குள் பத்திரிகைக் கிருக்கின்ற செல்வாக்கு உத்தியோகஸ்தருக் கில்லாததனாலும், அங்கு ஜனங்களே அரசாக்ஷிக்கு முதற்காரணர்களாய் இருக்கின்றமையாலும், பெரும்பான்மை, பத்திரிகைகள் எடுத்துக் கூறுகின்றபடியே, ராஜாங்க விஷயங்களும் ஒழுகப்பெற்று வருகின்றன. புதிதாக என்ன உண்மைகள் கண்டுபிடிக்கப் பட்டாலும், அவை உடனே பத்திரிகைகளிற்றோன்றி உலகப் பிரசித்தி பெறுவதனாலே, அது மேலேக்கு அவ்வுண்மைகளைக் கொண்டு, ஜனங்களிற் புத்திகூர்மையுடையோரால் தம்புத்தி செலுத்தப்பட்டு, புதிதாக அவைகளுக்கு மேலான உண்மைகளும் கண்டு பிடிக்கப்பட, எதுவும் சௌகரியமும் உண்டாக்கி விடுகின்றது. இது இப்படி யானல், மனிதர் அறிவு மேன்மேலும் தழைத்தோங்கி வளருகிறதற்குத் தடையென்ன? அது எத்தனை பேருக்கு அநுகூலம், எத்தனை காரியங்களுக்கு அநுகூலம்? இத்தகைய நன்மைகளையெல்லாம் நமது இந்திய நாட்டாரும் அடையவேண்டியது அவசியமோ? இல்லையோ? ஆனல், தமிழ்ப் பத்திரிகைகளின் தொகையும் அவைகளின் கையொப்பத் தொகையும் இதனுடன் எடுத்துச் சொல்லலாமென்றால் வெட்கம் மேவிடுகின்றதே! இது யாருடையகுற்றம்? தமிழ்ப்பத்திரிகாசிரியருடைய குற்றமா? அன்று, அன்று. அவர்கள் யாதுசெய்வார்கள்? தாங்கள் கையிலிருந்த பணமெல்லாம்போட்டு, கைநஷ்டம் பிடித்தாவது, சுதேசப் பொது நன்மையையேநாடி அகோராத்திரம் உழைக்கின்றார்கள். ஜனங்களுடைய ஆதரவல்லவோ பத்திரிகைக்கு உயிர்நிலை? பத்திரிகையாகிய உடம்பு, ஜனங்கள் ஊட்டிய உணவு போலல்லவோ உழைக்கும்? வயிற்றைப் பட்டினிபோட்டால், தேகஉறுப்புகள் ஆடுவதெங்கே? தனவான்களே! பணப்பையை இன்னும் இறுக இறுக முடியுங்கள்! ஒரு முடிப்புக்கு ஒன்பதுமுடிப்புக் கட்டுங்கள். உலகம் க்ஷேமமடையும். போகிறபோதும் நிரம்பக்கையிலே கொண்டு போகலாம். உலகம் கெட்டுப்போனாலும் கண்ணையிறுக மூடிக்கொள்ளலாம். உங்களை யொருவரும் கேள்வி கேட்பாரில்லை. சதிரும், பாணவேடிக்கைகளும், திருடரும், அநியாயவாதிகளும், பட்டப்பேரும் பணத்தையெல்லாம் அகப்பட்டமட்டும் அள்ளிக்கொண்டு போகட்டும். அவைகள்தான் இந்தியா தேசத்தை இறுதியில் கைதூக்கிவிடப்போகின்றது! பொதுநன்மைக்கும் கல்விக்கும் மாத்திரம் பணத்தைச் சிதறி விடாதேயுங்கள்! காரியம் கெட்டுப்போகும்! தமிழ்பாஷை எக்கேடு கெடட்டும். தாய் பட்டினி யிருக்கும்போது தங்கப்பல்லக்கிலேறும் நீதியைக்கைவிடவேண்டாம். நடக்கட்டும்! நடக்கட்டும்! காரியத்திற்குவர, இனியாவது, மேற்படி கூத்துக்களைக் கைவிடுத்து, நீர்வளம், நிலவளம் பொருந்திய இந்தப்பரதகண்டத்தில் இனிக் கல்விவளமும் செழிக்கும்படி செய்யவேண்டிய பொறுப்பான கடன் உங்கள்மேல் இருக்கிறதென்ற உண்மையை உற்று உணர்வீர்களோ? இறுகிய பணப்பையைச் சற்றேனும் நெகிழ விடுவீர்களோ? பொது நன்மைக்கு உள்ளமிரங்கிச் சற்றேனும் வாஞ்சை வைப்பீர்களோ? அப்படிச்செய்தால், நாம் எண்ணிடும் காரியமெல்லாம் கைகூடுமென்றும், தங்களுக்கு நீடூழிவாழும் புகழுடம்பும், இப்பரதகண்டத்திற்குக் கல்விபெருக்கும் செல்வப்பெருக்கும் ஒத்துக்கூடினவாழ்வும், லபிக்குமென்றும், பெரியோர் சொல்லுவதை இங்கு எளியேனும் சொல்லுகின்றேன். பின்னது உங்கள் சித்தம்போலும் தெய்வகிருபைபோலும் நடக்கும். நான் முன் எடுத்துச்சொன்னதிலிருந்து அத்தகைய நன்மைகளை யெல்லாம் கொடுப்பதற்கு ஒரு முக்கியகருவியான பத்திரிகைகளை இனி நம் தமிழ்ப்பாஷையிலும் வளரச்செய்வதும், தமிழ்ப்பத்திரிகைகளைத் தருவித்து ஜனங்களை வாசிக்கத் தூண்டுவதும், மிகவும் அவசியமான காரியமென்று யாவரும் அங்கீகாரம் செய்வாரலரே. அதனால், தமிழ்பாஷையும் விர்த்தியடையுமென்பதில் ஐயமொன்றில்லை.

(இன்னும்வரும்)

தி. லக்ஷ்மணபிள்ளை.

# சிறுவர்க்கானபக்கம்.

[விவேக சிந்தாமணியை வாசிக்கும் சிறுவர் சிறுமிகளுக்காக எழுதப்பட்டது.]

என் அருமை நண்பர்களே! இப்பக்கத்தைச் சீர்படுத்தி யச்சிடும் வேலை என்னதாக நானொப்புக்கொண்டிருந்தும் சென்ற சஞ்சிகையில் என்பேர் வழக்கம்போல் இப்பக்கத்தின்கீழ் காணப்படாமலிருந்ததை உங்களில் பலர் கவனித்திருப்பீர்களென்று எண்ணுகிறேன். சென்றமாதம் எனக்கிருந்தவேலைத் தொல்லைகளோடு தேக அசௌக்கியமும் சேர்ந்து கொண்டதால் உங்களுபயோகத்துக்காக நான் சேர்த்துவைத்த சிலவிஷயங்களை விவேகசிந்தாமணி பத்திராசிரியருக்கு அனுப்பி என்வேலையையும் அவரே பார்த்துக் கொள்ளும்படி கேட்டுக் கொண்டேன், இந்த மாசமுழுவதும் மாயாண்டிபொழுது பெரும்பாலும் வெளியூர்கள் சுற்றுவதிலேயே போயிற்று.

வெளியூர்சுற்றிச் சென்னைக்குத் திரும்பிவரும்பொழுதுபத்திரிகை பிரசுரமாகத் தயாராகும் காலமாகவிருந்தது. இருந்தாலுமிந்தவிசை உங்களுக்குவாசிப்பதற்கு இனியவிஷயங்க ளில்லாமற்போகவில்லை. மாயாண்டி இப்பொழுது முன்போல் ஒண்டிக்காரனாகவில்லை. தக்க சினேகிதர்கள் சிலர் சேர்ந்திருக்கிறார்கள். பத்திராசிரியர் பெரியவித்வான்கள் பலரைக்கொண்டு அவர் பக்கங்களுக்கு எழுதச்சொன்னால் நமது பக்கத்துக்கு எழுத நமக்குள்படித்த சினேகிதர்களில்லையா? அப்படிப்பட்டவர்களைக் கொண்டு நாமும் ஏன் பற்பலவிஷயங்களைப்பற்றி யெழுதச்சொல்லி நமதுபக்கத்தையும் சிறப்பிக்கச்செய்யலாகாது. இதை வாசிக்கும் சிறுவர்களில் அனேகர் பத்திரிகைக்கு எழுதச் சங்கோசப்படலாம். இவர்கள் சங்கோசத்தைவிட்டு வெளிவந்தெழுத வேண்டும். அவர்கள் உயர்ந்தவிஷயங்களைப்பற்றி மேலானநடையில் எழுதினால், நாம் நமக்கு உபயோகமாயிருக்கும் விஷயங்களைப்பற்றி யோசித்து நன்றாக எழுதிவருவோம். "குருவிக்குத்தக்கின இராமேசுவரம்" என்று கேட்டதில்லையா? ஆகையால் இதை வாசிக்கும் நமதுநண்பர்களெல்லாரும் சங்கோசத்தை விட்டுச், சிறுவர்களுக்குபயோகமான விஷயங்களைப்பற்றி யெழுதி யனுப்பிவரக்கோருகிறேன்.

நமது சபையில் சேர்ந்து நமது பக்கத்துக்கு எழுதிவர இசைந்த நேசர்களில் துட்டியண்ணு என்பவர் முதலானவர்.—இவர் நமது சிறுவர் சபையில் ஒரு மெம்பராயிருந்து அடிக்கடி நம்மோடு ஊடாடி உறவாடி விளையாடிவரச் சம்மதித்திருக்கிறார். இவர் பாடசாலைக்குப்போய் வருகிறவராயிருப்பதால் அடிக்கடி வேடிக்கையான கதைகளும் விசேஷமான சங்கதிகளும் என்னோடு சம்பாஷிக்கையில் சொல்வதுண்டு. வாய்வார்த்தையாக எனக்குச்சொல்லும் கதைகளைப்போல் நமது சிறுவர்பக்கத்துக்கு ஒரு நல்லகதை எழுத வேண்டுமென்று கேட்டுக்கொண்டிருந்தேன். அதற்கிசைந்து அவர் எழுதியனுப்பிய கதையும், கல்வாய்பாடசாலையில் படிக்கும் மாணுக்கராகிய நமது நண்பர் இன்னொருவர் கல்வி விஷயமாய் எழுதியனுப்பிய இன்னொரு கதையும் நான் ஊரிலிருந்து வருகையில் அச்சிடத் தயாராயிருந்தன. பத்திரிகாசிரியர் பத்திரிகை வெளியிடக் காலமாய்விட்டதென்று அவசரப்படுகிறாராதலால் நான் மேலேவளர்த்தியெழுதி அதிகப்பிரசங்கியெனப் பெயரெடுக்காமல்மேற்சொன்ன இருகதைகளை மட்டும் ஒன்றின் பின்னொன்றாகக் கீழே பிரசுரிக்கிறேன்:—

### ஒருவரும் கேர்வங்கொள்ளக் காரணமில்லை.
அல்லது
### ஐந்து விரல்களுக்கும் நேர்ந்த போராட்டம்.

என் அன்புள்ள தோழர்களே!

நான் இந்தத்தடவை உங்களுக்கு என்னகதை சொல்லலாமென்று மயங்கிக் கொண்டிருக்கையில், நான் போய்க்கொண்டிருக்கும் பாடசாலையில் படிக்கும் வாலிபர்களில் கோவிந்தன் என்பவன் கணக்கில் கெட்டிக்காரனாகவும், கோபாலன் என்பவன் பாஷையில் ஸமர்த்தனாகவும் இருந்தார்கள். அவர்கள் இருவருக்கும் நடந்த வாக்குவாதம் இது:—

கோவிந்தன்.—என்னடா கோபாலா, நீ பிரதிதினமும் கொடுத்தகணக்கைச் சரியாய்ப்போடுகிறதில்லை. அதனால் நீ தினமும் அடிபடுகிறாய். என்னை வாத்தியார் அடிக்கிறாரா பார்த்தாயா? வீணான ஜம்பமட்டும் பண்ணிகொள்ளுகிறாய்; அதில் என்ன பிரயோசனம்?

கோபாலன்.—இருக்கட்டும் அடக்கடா! உன்னை வாத்தியார் தினமும் இங்கிலீஷ் பாடத்தில் பலகைமேல் நிற்கவைக்கவில்லையோ? அப்பொழுது நான் தானே எல்லாருக்கும் முன்னேஇருக்கிறேன். வெளியிலே வந்து வெகு கெம்பீரமாய் "நான் உப்பில்லாமல் கலக்கஞ்சி குடிப்பேன்; வானத்தை வில்லா வளைப்பேன், மணலைக்கயிறாய்த்திரிப்பேன்" என்று வீண்விஸ்தாரம்படிக்கிறாய். வகுப்பிலேயோ, கடைசியில்போய்ப் பலகைமேல்நிற்பதில்குறைச்சலில்லை. போதும் வாயைமூடடா.

இப்படி இருவரும், நான் தான் கெட்டிக்காரன் நான்தான் கெட்டிக்காரன் என்று தர்க்கித்துக்கொண்டிருப்பதை உபாத்தியாயர் தற்செயலாய்க் கேட்டுக்கொண்டு வந்துவிட்டார். உடனே அவர்: "ஒவ்வொருவரிடத்தில்ஒவ்வொருயோக்கியதைஇருக்கும். எல்லாம் தெரிந்தவரும் இல்லை; ஒன்றும் தெரியாதவருமில்லை. ஆதலால் நீங்கள் இப்படி விவாதப்படக் காரணமில்லை யென்று சொல்லி,

"முற்றுமுணர்ந்தவரில்லை முழுவதூஉம்
கற்றனமென்றுகளியற்க—சிற்றுளியால்
கல்லுந்தகரும் தகராகனங்குழாய்!
கொல்லுலைக்கூடத்தினுல்."

"கடலேயனையம்யாம் கல்வியாலென்னும்
அடலேறனைய செருக்காழ்த்தி—விடலே
முனிக்கரசுகையில் முகந்துமுழங்கும்
பனிக்கடலு முண்ணப்படும்."

என்னும் இப்பாடல்களையுங்கூறி கோவிந்தனுக்கும் கோபாலனுக்கும் புத்தி சொல்லிப் போயினர். என் அருமைச்சிறுவர்களே! இதையொட்டி ஒரு விநோதமான சிறுகதை என்ஞாபகத்தில் வருகின்றது. அதை இங்கு எழுதுகிறேன்; கவனமாய் வாசித்துப் பாருங்கள்.—

ஒருகாலத்தில் வலக்கை விரல் ஐந்துக்கும் ஓர் விவாதம் உண்டாயிற்று.— "எந்தப்பொருளையும் பிடிப்பதற்கும் பிரயோகிப்பதற்கும் நான் இல்லாவிட்டால் மற்றவிரல்களால்முடியுமோ? என்னுடையசகாயம் எலலாருக்கும் வேண்டியிருக்கிறது. ஆதலால் நானே பெரியவன்," என்று அங்குஷ்டம் அதாவது பெருவிரல் அல்லது கட்டைவிரல் சொல்லிற்று. இதைக்கேட்டு தர்ஜனி (ஆள்காட்டிவிரல்) "வஸ்துக்களை இன்னது, இன்ன இடத்தில் இருக்கிறதென்று காட்டுகிறதும், பிறரைப் பயப்படுத்தி அதிகாரஞ்செய்து அதட்டி அடக்குவதும் நான்தானே. ஆகையால் நானே சிறந்தவன்." என்றது. அங்குஷ்டமும் தர்ஜனியும் சொல்லிய பேச்சைக் கேட்டுப் பொறுக்காமல் அநாமிகை (பவித்திரவிரல்) "தள்ளாதேயுங்கள் அண்ணன் மார்களே! சிரார்த்தம் முதலான வைதிககாரியங்களுக்குப் பவித்ரத்தை எனக்கிடுகிறீர்களோ, வேறு யாருக்காவது இடுகிறீர்களோ! நான்தானே வைதிககாரியங்களுக்கு உபயோகப்படுகிறவன். நீங்களெல்லாம் எந்தவைதிககாரியத்துக்கும் உபயோகப்படுவதில்லையே. நானே மேலானவன்"என்று அகங்கரித்தது. இது சொன்னவுடனே அதிக கோபங்கொண்டு கனிஷ்டிகை (சுண்டுவிரல்) "போதும், போதும் உங்கள் கடையைக் கட்டுங்கள்; 'ஆயிரம் யோக்யதை யிருந்தாலும் அரைப்பணத்துப் பொன் வேண்டாமா?' உங்களுக்கு என்னயோக்யதை இருந்தபோதிலும் என்ன? அலங்காரம்செய்வது எனக்கேயல்லாமல் உங்களுக்குச் செய்கிறீர்களோ?விலைஉயர்ந்தபொன்னும் இரத்தினங்களாலுமான மோதிரங்களை எனக்கு இடுவதனலேயன்றோ உங்களுக்குக்கூட அழகுண்டாகின்றது. ஆதலால் என்பெருமைஉங்களுக்குண்டோ? என்று நிமிர்ந்துநின்றது.

இப்படி நான்கு விரல்களும் பேசியதைக்கேட்டு நடுவிரல் (பாம்பு விரல்), சற்றுநேரம் யோசித்து, "மற்ற நாலுவிரல்களுக்குள்ள யோக்கியதைகளில் நமக்கு ஒன்றேனும் இல்லையே" யென்று தலைகுனிந்திருக்கையில், மற்றையவிரல்களெல்லாம் விவேகராஜனிடத்தில் தங்களுக்குள்ள வழக்கைத் தீர்த்துக்கொள்ளும்படி செல்ல, நடுவிரலும் அவற்றுடன் சென்று இராஜன்சமுகத்தில் போயிற்று. அப்போது பெருவிரல் தன்மேன்மையைச் சொல்லி நான்பெரியவன் என்றது. தர்ஜனி, தன்னுடைய பெருமையைக்கூறி, நான் தான் பெரியவன் என்றது. பவித்திரவிரல் தனது உயர்வைத் தெரிவித்து நானே பெரியவன் என்றது. சுண்டுவிரல் தன் சிறப்பைக் காட்டி நானல்லவோ பெரியவன் என்றது. முடிவில் நடுவிரல் அரசன் முன்சென்று, "இராஜனே, என்னிடத்தில் இவர்கள் கூறிய குணங்கள் ஒன்று மில்லாவிட்டாலும் நான் இவர்களெல்லாரையும் பார்க்கிலும் பெரியவன் என்பதற்குயாதும் சந்தேகமேயில்லை. சித்தமானல், இதோ நாங்கள் ஐந்துபேரும் வரிசையாக நிற்கிறோம்; யார்பெரியவன் என்பது தங்களுக்கே தெரியவரும்" என்று சொல்லி, ஐந்து விரல்களும் வரிசையாய் நிமிர்ந்து நின்றன. என்னதான் நிமிர்ந்து நின்றாலும் மற்றை நான்கு விரல்களும் நடுவிரலுக்குச் சரியாய் நீளமுடியுமா? "ஓங்கி ஓங்கிப் பறந்தாலும் ஊர்க் குருவி பருந்தாமா?"

இப்படி ஐந்து விரல்களும் நின்றநிலையில் மற்றை நாலு விரல்களைப் பார்க்கிலும் உயர்ந்திருந்த நடுவிரலை நோக்கி, "அங்குஷ்டம, தர்ஜனி, அநாமிகை, கநிஷ்டிகை என்னும் நால்வரும் ஒவ்வொருகுணத்தால் பெரியவர்களாயிருக்கிறார்கள்; நீர் அப்பேர்பட்ட யோக்யதை ஒன்றுமில்லாமல் வெறும் பெரியவராயிருக்கிறீர். ஆகையினல் நீங்கள் இனிப்பகையில்லாமல் ஒற்றுமையாய் ஒருவர்கையில் அடங்கி ஒருவருக் கொருவர் உபகாரிகளாய் வாழுங்கள்" என்று விவேகராஜன் சமாதானப் படுத்தினன். கேட்டீர்களோ என் இளந்தோழர்களே! ஆகையால் நீங்களும் அந்தவிரல்கள் போலவே கர்வப்பட்டுக் கலகப்படாமல் பெரியோருக்குஅடங்கிஒற்றுமையாய்வாழுங்கள். நல்லது நான் உங்களிடத்தில் வந்து நேரமாகிறது. நான் இப்பொழுது சொல்லியகதையைமறந்துவிடாமல் ஞாபகத்தில் வைத்துக்கொண்டு நடந்து வாருங்கள்; வருகிற தடவைக்கு ஒரு புதுக்கதை கொண்டுவருவேன்.

இப்படிக்கு
உங்கள் அன்புள்ள
குட்டியண்ணு

## கல்வி.

சிறுவர்களே! யான் ஒருசிறு கதை சொல்லுகிறேன்; சற்றுக் கவனித்துக்கேளுங்கள்.

அளகாபுரி யென்னும் பட்டணத்தில் அதிபோகனென்ற ஓர் அரசனிருந்தான். அவனுக்கு, அமலனென்றும் அச்சுதனென்றும் இரண்டு குமாரர்களிருந்தார்கள். அவர்களிருவரையும் அவ்வேந்தன் ஓர் பள்ளிக்கூடத்திற்கு அனுப்பிக் கல்வி கற்பித்து வந்தான். அவர்களில் மூத்தவனாகிய அமலன் சரியாய்ப் பாட்சாலைக்குப் போகாமலும், தாய் தகப்பன் அவர்கள் சொற்களைக் கேளாமலும், ஊரெங்கும் கெட்டவனென்று சொல்லும்படி நடந்து வந்தான். இளையவனாகிய அச்சுதன், எக்காலத்திலும் படிப்பின்பேரிலேயே கவனமா யிருப்பான். பாடசாலை நேரத்தில் வேறொன்றையும் கவனியான். உபாத்தியாயர் கற்பிக்கிறதைக் கருத்தாய் ஞாபகத்தில் வைத்து, தனக்குத் தெரியாதவைகளை உபாத்தியாயரைக் கேட்டுத் தெளிவான். பாடசாலை விட்டபிறகு, வழியில் தங்காமல், நேராக வீட்டுக்குப், போய்த் தனக்கு அன்றுகொடுத்த பாடங்களைக் கருத்தாய் வாசித்து, வீட்டிலுள்ளதைச் சாப்பிட்டு வாசிக்கத் தொடங்குவான். தான் மறுநாள் ஒப்பிவைக்கவேண்டிய பாடங்களை எல்லாம் நன்றாய் வரப்படுத்தி வைத்துவிட்டு, நித்திரை போவான். நான் படித்துத் தேறுகிறவரையில் வேறு வேலைக்குப் போகமாட்டேனென்றும், கல்வி விஷயத்தில் வேண்டிய செலவுகளைத் தடையின்றிச் செலவழிப்பது நல்லதென்றும் சொல்லுவான். "தக்கோனெனத்திரி" என்பதை எப்போதும் நினைத்துக் கொள்வான். இப்படியே நாளடைவில்இவன்கற்றுத்தேறியபின், "மஹேந்திரபுரி" யென்னும் ஓர் பட்டணத்தைச் சேர்ந்து, அவ்விடத்தில் பெரியோர்களால் ஸ்தாபிக்கப்பட்ட சகலகலா போதினி) என்னுஞ் சங்கத்திற் சேர்ந்து பயின்றுகொண்டிருக்கையில், அங்குள்ள கல்விமான்கள் இச்சிறுவனுக்கு ஞானம், தீரம், சத்தியம், நீதி முதலிய இராஜலக்ஷணங்களிருக்கக் கண்டு, அப்பட்டணத்து அரசனாகிய, சுஜன பூஷணனுக்கு அச்சங்கதியைச் சொல்ல, அவ்வரசன், இப்பிள்ளையைத் தன்னரண்மனைக்கழைத்துச் சிலநாள் வைத்திருந்து இவனது சற்குணத்தை அறிந்தவுடனே, தன் குமாரத்தியாகிய, "பரிமளசுந்தரி" என்பவளை அவனுக்கு விவாகஞ்செய்வித்து, அநேக பட்டணங்களும், பூஷணங்களும் ஸ்ரீதனமாகக் கொடுத்து, மிகுந்த ஆரவாரத்துடனே சேனைகள்சூழத் தன் ஊருக்கனுப்பிவைத்தான். இதைக்கண்ட "அதிபோகன்" பூரணானந்தனாய்த் தன் மகனைத்தழுவிக்கொண்டு தன்னரசை அவனுக்குக் கொடுத்தான். மூத்தவனோ, வீணாக அலைந்து, கடன் பட்டுச்சிறைச்சாலையில் அடைக்கப்பட்டிருந்தான். அச்சுதன் அதைக்கேள்விப்பட்டுத் தன்தமயன் பட்டகடன்களைக் கொடுத்துவிட்டு, அவனைச் சிறையினின்றும் விடுத்தான். நேசர்களே! கல்வியினாலுண்டாகிய பயனைக்கற்றறிந்தவர்கள்அல்லாமல் என்னால் சொல்லத்தரமோ? அதினால் தான், ஒளவையார் "இளமையிற்கல்" என்றாள். "கற்றோர்க்குச் சென்ற விடமெல்லாம் சிறப்பு" என்பது இக்கதையினால் சரியென்று நமக்கு விளங்குகிறதல்லவா? நாம் சோம்பேறித்தனமின்றி இளமையிலேயே நன்றாய் வாசிக்கவேண்டும். இளமையில் தேடவேண்டியது கல்விப்பொருளும், முதுமையில் தேடவேண்டியது செல்வப்பொருளுமாம். அழுக்குத்துணியில் சாயம் நன்றாய் ஏறாது. அழுக்குப்பிடியாமலிருக்கும் வஸ்திரத்தில் மிக நன்றாய்ச் சாயம்பிடிக்கும். அதுபோல, நமது மனம் இளமையில் வேறு வேலையில் போகவில்லை. அப்போது வாசித்துக்கொண்டால் கல்வி மனதில் நன்றாய்ப்படியும். நாம் பெரியவர்களாய் நம்முடைய மனம் சமுசாரவிஷயத்தில் புகுந்தபின் நல்லவிஷயங்களைச் செய்யவும், கல்விகற்றுக்கொள்ளவுமிடங்கொடுக்காது. 'கற்றோர் பெருமை கடலினும்பெரிது' என்ற பழமொழியைக் கவனித்து நடப்பது மன்றியில் மாட்சிமைமிகுந்த விவேகசிந்தாமணிப்பத்திராதிபர் அவர்கள் பத்திரிகையில் நமக்கென்று ஓர் பக்கம்விட்டு நம்மை ஈடேற்ற முயற்சிசெய்து வருவதற்குக் கைம்மாறாக, நாம் அவர்களுக்கு மிகுந்த வந்தனஞ்செய்து, என்றும்மறவாத நன்றியுடையவர்களாயிருக்கவேண்டும்.

கல்வாய் அப்பர்ப்ராமெரி பாடசாலை. கூடுவாஞ்சேரி போஸ்டு. 16—8—92.

உங்கள்நண்பன்,
வீரரத்தினவர்ம பால கிஷ்ணநாய்க்கர்
அப்பர்ப்ராமெரிவகுப்பு மாணாக்கன்; கல்வாய்.

என் சின்னஞ் சிறு நேசர்களே! நமது நண்பர்கள் சொல்லும் புத்திமதியைக் கவனித்து, நீங்கள் கர்வம் சிறிதுமின்றிக் கல்விப்பொருளை ஆவலுடன் சேகரிப்பீர்களென்று நம்புகிறேன்.

மாயாண்டி.

## விசேஷக்குறிப்புகள்.

**நமதுபத்திரிகை** கவர்ன்மெண்டார் இப்பத்திரிகையின் ஆசிரியர் செய்துகொண்ட விண்ணப்பத்துக்கிசைந்து விவேகசிந்தாமணிப் பத்திரிகையை யங்கீகரித்து இப்பத்திரிகைக்கு கவர்ன்மெண்டு உத்திரவுகள் சமாசாரங்களெல்லாமளிக்கஇசைந்து 1892வரு ஆகஸ்மீ 9உ யிட்ட 807 நெம்பரில் உத்திரவு பிறப்பித்திருக்கிறார்கள். அடுத்த சஞ்சிகைமுதல் கவர்ன்மெண்டு சம்மந்தமான முக்கிய விஷயங்கள் நமது பத்திரிகையில் தெரிவிக்கப்படும்.

**நமதுபத்திரிகைக்கீந்த உதவி** அறிவைப் பரவச் செய்யும் சபை ஏஜன்ஸி காரியதரிசியவர்கள் தேக அசௌக்கியார்த்தம் வெளியிற்போக நேரிட்டதில் தென்னார்க்காடு ஜில்லா மன்னார்குடி, சிதம்பரம், மாயவரம், கும்பகோணம் இவ்விடங்களுக்கு விஜயஞ்செய்து வந்தார். அங்கேயுள்ள சர்க்கார் உத்தியோகஸ்தர்களும் மற்ற பிரதமஸ்தர்களும் அவருக்கு வேண்டிய உதவிசெய்து விவேகசிந்தாமணிப் பத்திரிகைக்குக் கையொப்பம்சேர்க்க தக்க ஆதரவளித்ததற்காக அவர்களெல்லார்க்கும் நாம் இருதய பூர்வமாக வந்தனமளிக்கிறோம். விவேகசிந்தாமணி அங்கங்கே சுற்றுப்பக்கங்களில் பரவிப் பலப்படச்செய்ய ஒத்தாசைசெய்து உபகரிப்பதாக வாக்களித்த கனவான்களெல்லாரும் சற்றுசிரமம் வகித்துழைப்பார்களானால் நமது பத்திரிகை வெகு சீக்கிரத்தில் பலப்பட்டு நிரந்தரமாய் நிற்கும் பாக்கியம் பெறுமென்று நம்புகிறோம்.

இச்சபை யேற்பாடு விஷயமாய் நாம் வெளியிட்ட வரலாற்றுப் பத்திரிகையை தமிழிற்கு உறைவிடமாய் விளங்கிப் பிரக்கியாதிபெற்ற திருவாவடுதுறை மடத்து தற்கால அதிபர் ஸ்ரீலஸ்ரீ அம்பலவாணதேசிகர் அவர்கள் மகாசந்நிதானத்துக்கும் அனுப்பியதில் ஸ்ரீலஸ்ரீ தேசிகர் அவர்கள் இச்சபை யேற்பாடு அவசியமானதென்றும் இவ்வேற்பாட்டுப்படி பிரசுரிக்கப்படும் பத்திரிகைக்குப் பொருளுதவி செய்தாதரிப்பதாகவும் வாக்களித் திருந்தபடி அவர்களுடைய பெயர் நமது போஷகர்கள் ஜாப்தாவில் பிரசுரிக்கப்பட்டதை யாவரும் அறிவார்களே. அவ்வாக்குறுதிக்கிசைய ஷை ஆதீனகர்த்தர் ஸ்ரீலஸ்ரீ அம்பலவாண தேசிகர் அவர்கள் நமது விவேகசிந்தாமணிக்கு முதலுதவியாகப் பத்து காபிகளுக்குள்ள சந்தாதொகை யளித்துபகரித்து பின்னுக்கு இன்னும் உதவிசெய்வதாக வாக்களித்ததற்காக அவருக்கு நமது சொந்த நன்றியறிதலையும் நமது சபை ஏஜன்ஸியாரது இருதயபூர்வமான வந்தனத்தையும் இதுமூலமாய்த்தெரிவிக்கிறோம். இதர மடாதிபதிகளும் ஜமீன்தாரர்களும் இவர் நல்லுதாரணத்தை மேற்கொண்டு நமது சபைக்குத் தக்க பொருளுதவி செய்தாதரிப்பார்களென்று கோருகிறோம். நமது ஜமீன்தாரர்களும் மடாதிபதிகளும் தலைக்கு 100, 50, காபிகள் வாங்கி கிராமாந்திரங்களில் நமது பத்திரிகையைக் கொஞ்சகாலத்துக்குப் பரவச்செய்து வருவார்களானால் அது நமக்கும் ஜனங்களுக்கும்தமிழ்ப்பாஷைக்கும் செய்த பேருபகாரமாகவிருக்கும்.

**கிறிஸ்டியன் காலேஜ் மாக்ஸீன்.** இப்பத்திரிகையின் ஆகஸ்டு மாதச் சஞ்சிகையில், ம-ா-ா-ஸ்ரீ, ஸ். ஸத்தியநாதன் M. A; L. L. B. என்பவர், உயிர்வாழ்க்கையைப் பற்றி யெழுதுகிறார். பிறர் நன்மைக்காகவும் உலக விருத்தியின் பொருட்டும் வாணாளைச் செலவிட்டாலன்றி உயிர்அநுபவிக்கத்தக்க தல்லதென்பதும், அப்படி உலகவிருத்தியை நாடும் முயற்சிகளெல்லாம் கடவுள் ஒருவர் உளரென்னும் நம்பிக்கையின்றிப் பயன்படா வென்பதும், அவர் கொள்கைகளாயிருக்கின்றன.

ம-ா-ா-ஸ்ரீ வி. நாகமய்யர் B. A. என்பவர் மலையாள தேசத்து மந்திரவாதங்களைப் பற்றி யெழுதுகிறார். ஒவ்வொரு சாதியாரும் யாதேனும் ஒருகாலத்தில் மந்திரவாதத்தில் நம்பிக்கை யுடையவர்களாயிருந்திருக்கிறார்களென்று சரித்திரங்கள் மூலமாய்க் காட்டியபின், இந்துக்களைப் பற்றிப் பேசும்பொழுது அவர் எடுத்துச் சொல்வதொன்றுகவனிக்கத்தக்கது. அதென்னவெனில், ஸர் மானியர் வில்லியம்ஸ் என்னும் பண்டிதர், நம்மதத்தைப்பற்றியபுஸ்தகத்தில் தற்காலத்தில் நம் தேசத்திலுள்ள தெய்வவணக்கத்தைப் பற்றிப் பேசுகையில், 100பேர்களில் குறைந்தது 90பேர்களுடைய பக்தியானது பயத்தினால் மட்டு முண்டாவதென்று எழுதி யிருக்கிறார்.தெய்வபக்தி யன்பையன்றோ ஆதாரமாய்ப் பெறவேண்டும்?

## சமாச்சாரக் குறிப்புகள்.

ஆஸ்ட்ரேலியா தேசத்தில், விக்டோரியா மாகாணத்துச் சட்ட நிருபண சங்கத்தார், மாதர்கள் தங்கள் விவாகச் சடங்குக்குச் சம்மதங் கொடுக்கப் பாத்திரமுள்ளவர்களாகும் வயதை 16க்கு உயர்த்தினதைப் பற்றி, அத்தேசத்துப் பத்திரிகைகளெல்லாங் கொண்டாடுகின்றன. 12வயதுக்கே முறுமுறுக்கும் ஜனங்களும் சில தேசங்களிலிருக்கிறார்கள்.

இந்தியாதேசத்து ரெயில்வேக்களில் வேலையிலிருக்கும் 250,598 ஜனங்களில், 250,000 சுதேசிகளிருக்கிறார்கள்.